..ந்த மண்டலி வெளியீடு-13.

ஸ்ரீ குஹமயம்

# அஹங்கிரஹோபாஸந விமர்சம்

இது

ஸ்ரீ குஹாநந்த மண்டலியின் சிஷ்யகோடிகளில் ஒருவரான

**வித்வான். G. N. வெங்கடநரசய்யா அவர்களால்**

இயற்றப்பட்டது.



ஸ்ரீ குஹாநந்த மண்டலி,
பழவந்தாங்கல், மதராஸ் 16.

1955

[விலை ரூ. 1—8—0

# FOREWORD

I think I have been given the honour of introducing this book primarily because of my connection with the Guhananda Mandali. It was in 1937 that the Mandali first started to give expression to the esoteric significance of Sri-Vidya. It was then that the President delivered some lectures which took the form later of the book, Saparya-vasana. Subsequently, however, lectures could not be held regularly but the activities of the Mandali were so adjusted as to promote the ideals of Sri-Vidya worship.

The pesent book, Sri. G. N. Venkatanarasiah's Ahangrahopasana-Vimarsam may be considered the second book of the Mandali on vasanas. It is written by one who has by constant study and contact with the Master, imbibed the real spirit behind the worship and the ideal that the Mandali holds out for the world of Upasakas.

Like the Saparya-vasana, this book endeavours to explain every section of the Saparya in the light of Advaita Vedanta and shows that at every stage the ultimate aim of the worship is the ideal of Ahangrahopasana. The book begins with a careful definition of this ideal and shows its existence at every stage of the Puja At several places, the ideas expressed here would supplement what has already been said by the President in the first book. There is also an explanation

here and there for what has been left out in the previous book. It is needless to say that reference can be had from the existing texts on Saktha worship, for many of the ideas given. In such cases where a direct reference cannot be traced, the ideas have grown out of an intuition based upon absolute faith in the guiding power of the Gurucharana. Approved as it has been by Sri-chidananda-natha, there need be no question about the authenticity of the opinions offered in the book.

It is a matter of great satisfaction that the Mandali has produced another thought-provoking writer with the full equipment of Purnadiksha in its fullest significance. Every Sri-Vidya Upasaka would welcome this publication in that it conveys a profound message within its short compass, and not only indicates the benefits derived by an ordinary worshipper while emphasising the highest ideal of the worship, but serves. as it were, as an augury for the useful continuance of the Mandali for ever. It is to be hoped that the aspect of Kama-kala-dhyana which has not been dwelt with in as great detail as might be desired, would be treated adequately in a supplementary publication.

Madras-17,
28-8-1955.

A. NATARAJA AIYAR, B. A.
*Honorary Secretary,*
Sri. Guhananda Mandali.

# சிறப்புரை

---

"அஹங்கிரஹோபாஸனா விமர்சம் என்னும் இந் நூல், சென்னை ஸ்ரீ குஹாநந்த மண்டலியின் சிஷ்ய கோடிகளுள் ஒருவரான ஸ்ரீ. வித்வான் G.N. வெங்கட நரசய்யா அவர்களாலியற்றப்பட்டதாகும். உபாஸ்ய உபாஸகர்கட்குள்ள வாஸ்தவ அபேதத்தைப் பிரதி பாதிப்பது அஹங்கிரஹோபாஸனையெனப்படும். இது ஆத்மப்பிரஹ்மைக்கிய அகண்ட ஞான ஸாதன மாகுமென்பது சாஸ்திர சித்தாந்தம். இவ்விஷயம் இந்நூலில் விஸ்தாரமாய் விமர்சிக்கப்பட்டுள்ளது. த்ரிபுடியாகும் உபாஸ்ய, உபாஸக, உபாஸனைகளின் அபேத பாவனையே ஸ்ரீ சக்ரபூஜையென்று உப நிஷத்துக் கூறுகின்றமையின் ஸ்ரீ வித்யோபாஸனை யில், அஹங்கிரஹோபாஸனா ஸ்வரூபத்தை இந்நூல் கரதலாமலகம் போல் விமர்சிக்கின்றது. உபாஸனை யில் பாவிக்கத்தக்க தத்வங்களே வாஸனையாமென்று ஸ்ரீ வித்யா கிரந்தங்கள் கூறுகின்றன. வாஸனைகள், உபாஸகனுடைய மனத்தின் பக்குவத்திற்கிணங்க மாறுபடும். இது, ஸ்ரீ பாஸ்கரராயர் முதலிய பெரி யோர் அங்கீகரித்த விஷயமாகும். குடத்தின் தத்து வம் மண்தானென்பதும், ஆகாசந்தானென்பதும், பிரஹ்மம்தானென்பதும் அதம, மத்திம, உத்தம அதிகாரிகளைப் பொருத்திருக்கின்றன. மேற்கூறிய மூன்றுவகையான வாஸனைகளும் ஸமஞ்சஸமானவை யேயாகும்.

ஸ்ரீ வித்யாஸபர்யாவாஸனை யென்னும் நூலையாதாரமாகக் கொண்டு இந்நூலியற்றப்பட்டதாகும்; ஆயினும், இந்நூலில் வேறுவிதமாக வாஸனை கூறப்பட்டிருப்பினும் அது முரணாகாது; ஒத்துக்கொள்ளக் கூடினதேயாகும். இந்நூல் உபாஸகர்கட்கேயன்றி அத்வைத சாஸ்திராப்பியாசம் செய்யும் முமுக்ஷுக்களுக்கும் உபயோகமாயிருக்குமென்பது எனது அபிப்பிராயம். ஷை மண்டலியைச்சேர்ந்த சிஷ்யர்கள் முயன்று ஆராய்ச்சி செய்து ஒவ்வொருவரும் குறைந்தது ஒவ்வொரு நூலாகிலும் இயற்றுவாரேயாயின் மண்டலி செய்யுங் காரியம் ஸபலமாகும். இந்நூலைச் சிரத்தையோடு வாசித்துணர்பவர்க்கு, ஸ்ரீ நாத சரணங்களின் அநுக்கிரஹத்தால், ஆத்மப்பிரஹ்மைக்கிய ஸாக்ஷாத்கார நித்தியாநந்த நிலையெய்தும். இதற்குப் பரதேவதை யருள்புரிவாளாக.

சிவம்.

இங்ஙனம்,

N. சுப்பிரமண்ய அய்யர்,
(சென்னை ஸ்ரீ குஹாநந்த மண்டலியின்
ஸ்தாபகரும், அக்கிராசனரும்.)

பழவந்தாங்கல்,
மதராஸ்-16
28-8-1955.

# முன்னுரை

---

பற்பல வாகும் உலகத்துப் பொருள்களிற் செல்லும் மனந்தானும்
சற்குரு தந்த ஞானத்தால் தெளிந்துபின் அகண்ட மாய்நிற்கப்
பொற்புடன் அதனுள் திகழ்கின்ற பூரண மாகும் சித்தேயாம்
விற்பனர் போற்றும் இலலிதைகான் வியாபகப் பிரம்மம்
வேறன்றே.

அநுக்ரஹ உபாஸனா விமர்சம் என்னும் இச் சிறு நூல் தேவிக்கு ஸபர்யை செய்வதில் ஈடுபட்டுள்ளவர்க்கு அவர் செய்யும் அந்த ஸபர்யை அநுக்ரஹோபாஸனைக்கு எந்த அளவில் ஸஹகாரியாக உள்ளது என்பதை விளக்க வந்ததேயாம். இவ்வாறு கூறியதால், இந்நாலின் விஷயம் அநுக்ரஹோபாஸனையும், அதிகாரிகள் ஸ்ரீவித்யோபாஸகரும், சம்பந்தம், அந்த ஸ்ரீவித்யோபாஸனை அநுக்ரஹோபாஸனைக்கு ஸஹகாரியாகும் தன்மையும், பயன் அநுக்ரஹோபாஸனைக்கு உரிய பயனும் ஆம் என்பது பெறப்பட்டது.

இந்நூலுக்கு அதிகாரிகள் பொதுவாக ஸ்ரீவித்யோபாஸகர் என்று கூறினும், சிறப்பாக ஸ்ரீகுஹானந்த மண்டலியின் பிரசுரமாகிய ஸ்ரீவித்யா ஸபர்யா பத்ததியினைப் பின்பற்றுவோரே ஆவர்.

சமதமாதி சாதனங்களைச் செய்து சற்குருவை யடைந்து அவரிடம் மஹாவாக்கியம் சிரவணம் செய்தும், எவனால் ஆன்மா அபரோக்ஷமாக அறியப் படவில்லையோ, அவனே ஸ்ரீவித்யைக்குச் சரியான அதிகாரியாவான். ஆனால் இப்பொழுது காணப் படும் ஸ்ரீவித்யோபாஸகர்களில் பலர் அத்தகையர்

அல்லர். அவர்களில் சிலர், புக்திமுக்தி யாகிய இரண்டையும் தருபவள் தேவியே என்று பெரியோர் சொல்லக் கேட்டுத் தீக்ஷை பெற்றவர்கள்; சிலர், தமக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கிக் கொள்ளத் தேவியிடம் சரணம் புகுந்தவர்; சிலர், தமக்கு அறிமுகமாய் உள்ள பிறர் தேவியின் உபாஸனை செய்வதை அறிந்து தாமும் அதனை மேற்கொண்டவர். காரணம் எதுவாயினும் அவர்கள் தேவி உபாஸனை செய்யப் புகுந்தமையே மோக்ஷத்திற்கு முதற்படி ஏறினமையாம். அவரவருடைய புண்ணியத்திற்குத் தக்கபடி இவ்வுபாஸனை அவரவர்க்கு மிக்க எளிதாகவோ அல்லது மிக முயன்ற பின்போ கிடைக்கும். ஆயினும் இவ்வுபாஸனையில் இறங்கிய பின் மேலும் மேலும் அதனில் விருத்தியடைவதற்கு முயலாமை மிக்க அறியாமையேயாகும். அது, விலையுயர்ந்த மாணிக்கத்தைப் பெற்றும் அதனை வெறும் கண்ணாடித் துண்டாக நினைத்து அதனைக் காப்பாற்றிக் கொள்ளாமைக்கு ஒக்கும்.

இவ்வுபாஸனையை மேற்கொண்ட எனக்கு இதனுள் காணப்படும் பாஹ்ய கிரியைகளில் மனம் ஈடுபடவில்லை. அக்ஷர லக்ஷம் ஜபம் செய்தல், அதற்கு உரிய அளவு தர்ப்பணம் ஹோமம் முதலியவற்றைச் செய்தல் ஆகிய புரச்சரண அங்கங்களிலும் என் மனம் செல்லவில்லை. இது வெறும் பூஜையானல், இதற்கு மிக்க பொருள் வேண்டியிருக்கிறதே; பிற ஆட்களின் உதவியும் வேண்டியிருக்கிறதே; பணம் படைக்காதவர்க்கு இது இயலாதது போன்றிருக்கிறதே; பஞ்சாயதன பூஜையே போதாதா, என்ற எண்ணம் பன்முறை என் மனத்தை இடித்தது.

ஆகையால், இவ்வுபாஸனையால் யாம் பெறத் தகுந்த பயன் யாது என்பதைச் சிறிது சிறிதாக ஆராயப் புகுந்தேன். அவ்வாராய்ச்சியின் பயனே இச்சிறு நூலாகும்.

"பரா பூஜா வாஸனா விமர்சம்" என்ற நூல் ஒன்றிருக்க, இந்நூலால் பெறத் தகுந்த சிறப்புப் பொருள் ஏதாவது உண்டா; இது அதனினும் வேறா எனின், இரண்டு கேள்விகட்கும் முறையே "இல்லை" "அல்ல" என்பன பதிலாகும். இலட்டு, மைசூர்ப்பாகு என்னும் இரண்டு பண்டமும் கடலைமா சர்க்கரை ஆகிய இரண்டு முக்கியப் பொருள்களையே உடையன; ஆயினும் அவை வெவ்வேறாக அநுப விக்கப் படுகின்றன. அதுபோல், இச்சிறு நூலா னும் ஒரு சிலர்க்கு நன்மை ஏற்படலாம். அந்நூலைப் படித்தற்கு இந்நூல் ஓர் அளவுக்கு உதவி புரியும் என்பது என் நம்பிக்கை.

இந்நூலில் உள்ள வாஸனையாகும் பாகங்களெல் லாம் யானே என் மனத்து ஆராய்ந்து தீர்மானத்துக் குக் கொண்டுவரப்பட்டவையாகும். என் குருநாத ரிடம் அவ்வப்பொழுது கேட்டறிந்த உண்மைகள் அவற்றிற்குச் சிறந்த உதவியாய் நின்றுள்ளன. ஓரி டத்தில் மாத்திரம் இந்நூல் பரா பூஜா வாஸனையி லிருந்து சிறிது வேறுபட்டுள்ளது. அது, த்விதிய சகலப் பிரதிஷ்டையை ஈச்வரனின் ஸ்வரூபத்தை ஆராய்தலாகக் கொண்டமையே. இந்நூலை முடித்த பின்னரே இவ்வேறுபாடு உள்ளதைக் கண்டேன். நான் கொண்ட பிற பாவனைகளுக்கு இது பொருந்தி இருந்தமையால் அது அப்படியே இருக்கவிட்டேன். அதனை அவ்வாறு அறிந்து பெரியோர் என்னை மன்னிப்பாராக.

பல உபாஸகர் கூடும் இடங்களில் ஸ்ரீவித்யை சம்பந்தமான பேச்சுகள் நிகழ்வதுண்டு. அப்பொழுது பலர் சிற்சில சந்தேகங்களை எழுப்புவர். அவற்றிற்கு விடை அப்பொழுதே கிடைத்து விடுவதுண்டு. சில சமயங்களில் அவை தீர்க்கப் படாமலே இருந்து விடுவதுமுண்டு. என் சிற்றறிவுக்கு எட்டின அளவிற்கு அவற்றுள் சிலவற்றை இந்நாலுள் விமிர்சித்துள்ளேன்.

இந்நால் உபாஸகர்களுக்குத்தான் பயன்படும். ஆகையால் பேச்சு வழக்கிலுள்ள மொழி நடையால் இது இயற்றப்பட்டது.

அஹங்கிரஹோபாஸனை பரவனு விஷயம் தானே, இதனுள் சாக்தோபாஸகர்களுக்குரிய கட்டுப்பாடுகளாகும் தர்மங்களைக் குறித்ததேன் என்னும் ஐயப்பாடு நிகழ்தல் நியாயமே, ஆயினும் அதற்கு ஓர் சமாதானம் கூறப்படுகின்றது. அஹங்கிரஹோபாஸனை கேவல ஞான மாத்திரமன்று. இது தியானமும் கூடியதாம். தியானமோ கர்த்துரு நிஷ்டம். இங்குத் தியானம் செய்யும் கர்த்தாவோ ஸாதகன்; பிரம்மாத்மைக்கிய நிலையை அடைந்தவனல்லன். அவனே, அந்நிலையை அடைந்தவரான குருவைச் சரணடைந்து அவர் சொன்ன வழியில் உபாசனை செய்யவேண்டியவன். ஓர்கட்டுப்பாட்டுக்கு அடங்கி உபாஸனை செய்யாவிடில் சோம்பல், வியாதி, அறியாமை ஆகியவற்றால் தியானத்திலிருந்து சிறிது நழுவுவான். அதைச் செய்யும் விதத்தையும் தன்னை அறியாமலே மாற்றிக் கொள்வான். சில சமயங்களில் வெளிப்பகட்டில் மனம் சென்றுவிடும், பிறரால் புகழ்ப்படுவதற்காக வேஷம் போடும் நிலைக்

கும் இறங்குதல் நேரிடும். ஆதலால் தியானரூபக் கிரியை பரிபக்குவம் அடையும் வரையில் சாதகனுக்குக் கட்டுப்பாடு அவசியமாகும். பெற வேண்டிய பயனைப் பெற்றபின் கட்டுப்பாடுகள் தாமாகவே விலகும். இவ்வாறு பாஹியக் கட்டுப்பாடு மனத்தைக் கட்டி ஒருமுகப் படுத்துவதில் ஸஹகாரியாகும் என்று கொண்டே சாதகர்களுக்குரிய விசேஷமான சில விதிகளை இந்நூலுள் புகுத்தியதாகும்.

தான் செய்யும் ஆராய்ச்சியைத் தன் குருவினிடத்தில் தெரிவித்தல் ஒவ்வொரு சிஷ்யனுக்கும் இன்றியமையாத கடமையாகும். ஆகையால் இந்நூலை என் குருவுக்குக் காட்டினேன். அவரது இசைவு பெற்றே இது அச்சுவாகனம் ஏற்றப்பட்டது.

பிரமாதாதி தோஷங்களாலும், சாத்திர அறிவின்மையானும், மனத்தில் நினைத்தவையெல்லாம் எழுத்தில் அறிவிக்கும் ஆற்றல் இன்மையானும் இதனுட்பல பிழைகள் காணப்பெறலாம். குழந்தையின் மழலைச் சொல்லாக நினைத்து ஆரூட ஞானிகள் என்னை மன்னித்து அவற்றை எனக்குத் தெரிவிக்குமாறு வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்.

இராச்சியத்தையே கொடுத்து விடலாம், தன் சிரஸ்ஸையே கொடுத்துவிடலாம், ஆனால் **ஷோடசீ மஹாவித்யையைக்** கொடுக்கக் கூடாது என்ற ஆன்றோர் வாக்கு அவ்வித்யையின் உத்தமோத்தமத் தன்மையைப் பறைசாற்றுகின்றது. அதனையே எனக்குத் தந்து என்னை உய்வித்துப் பூரணனாக்கிய என் குருநாதர் இச்சிறு நூலை அங்கீகரித்து

இதற்கு ஓர் சிறப்புரையும் தந்தருளியமைக்கு அடியேன் நன்றி செலுத்துகிறேன் என்ற கூறுதல் வீண் உபசார வார்த்தையாகும்.

ஸ்ரீகுஹானந்த மண்டலியின் கௌரவ காரிய தரிசியாகிய பிரஹ்மஸ்ரீ A. நடராசய்யர் இந் நூலுக்குத் தந்த ஆங்கில முன்னுரைக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இதனைக் குறுகிய காலத்துக்குள் செம்மையுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ முத்தமிழ் அச்சகத்தாருக்கும் என் நன்றி.

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே". ஒன்றும் அறியாத யானும் இத்தகைய நூல் எழுதி முடித்தற்கு என்னை ஊக்கிய என் குருதேவர் ஸ்ரீ சிதானந்தநாதர் திருவடிக் கமலங்களில் இந் நூலை ஸமர்ப்பணம் செய்கிறேன்.

சிவம்.

இப்படிக்கு.

**G. N. வெங்கடநரசய்யா.**

**பிழை திருத்தம் :**

பக்கம் 12 வரி 12ல் "வரச்சியமாகும்" என்பதை "வாசகமாகும்" என்று திருத்திக்கொண்டு பிறகு நூலைப் படிக்கத் தொடங்குக.

உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:

ஸ்ரீகுருப்யோ நம:

ஸ்ரீலலிதா த்ரிபுர சுந்தர்யை நம:

# அஹங்க்ரஹோபாஸன விமர்சம்

## மோக்ஷத்தின் ஸ்வரூபம்

பெறுதற்கரிய மனிதப் பிறவி பெற்றவர் யாவரும் துக்கரூபமான சம்சாரத்திலிருந்து விடுபட முயலல் வேண்டும். எப்பொழுதும் துக்கம் வேண்டாம் என்றும், சுகம் வேண்டும் என்றும் ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். ஒருவகைத் துக்கத்தைப் போக்கினவுடன் மற்றொன்று வந்து நிற்கின்றது. ஆகையால் ஆத்யந்திக துக்க நிவ்ருத்திதான் விரும்பப்படுகிறது. உலகத்தில் பெறப்படும் சுகமோ ஏதோ ஒரு காலம் வரையில்தான் நிலைக்கிறது. அச்சுகத்தின் அழிவு துக்கம் தருகிறது. அது அழியும் என்ற எண்ணமும் துக்கத்தைத் தருவதாகும். ஆகையால் துக்கம் சிறிதும் இல்லாததும் நிரந்தரமானதுமான ஆநந்தமே எல்லாரும் விரும்பத் தகுந்ததாகும். அதுவே மோக்ஷத்தின் ஸ்வரூபமாகும். ஆநந்தகனமான பிரம்மத்திற்கும் தனக்கும் அபேதம் உள்ளதை முமுக்ஷு அறிந்துகொண்டு அதை இடைவிடாமல் சிந்தித்துப் பிரம்மமாகவே நிலைத்தல் மோக்ஷத்தை அடைந்தமையாகும்.

## முமுக்ஷு செய்ய வேண்டிய ஆராய்ச்சி

இதற்கு முதற்படியாக முமுக்ஷுவானவன் ஜகத்து, பரம், ஜீவன் ஆகிய இம்மூன்றின் ஸ்வரூபத்தை அறிய வேண்டும்.

அறியப்படும் இந்த ஜகத்தின் தன்மை என்ன? அது யாரால் சிருஷ்டிக்கப்பட்டது? எவ்வாறு சிருஷ்டிக்கப்பட்டது? ஏன் சிருஷ்டிக்கப்பட்டது? அது எதில் நிலைத்திருக்கிறது? அது அழிந்த பின் என்ன ஆகும்? இவ்வாறெல்லாம் ஆராய்வதே ஜகத்தைப்பற்றிய ஆராய்ச்சியாகும்.

பரம் அல்லது ஈச்வரனுடைய ஸ்வரூபம் என்ன? அவருக்கும் உலகத்திற்கும் உள்ள சம்பந்தம் என்ன?—முதலியவற்றை ஆராய்வதே ஈச்வரனைப் பற்றிய விசாரமாகும்.

ஜீவனுடைய தன்மை என்ன? அவனுக்கும் ஈச்வரனுக்கும் உளள சம்பந்தம் என்ன? அவனுக்கும் உலகத்திற்கும் உள்ள சம்பந்தம் என்ன?—ஆகிய இவற்றை, ஆராய்தலே ஜீவனைப் பற்றிய விசாரமாகும்.

**அவ்வாராய்ச்சியின் பயன்**

இவ்வாறு விசாரம் செய்தலால் இந்த ஜகத்து அஸ்தி பாதி பிரியம் நாமம் ரூபம் என்னும் ஐந்து அம்சங்கள் உடையது என்றும், அவற்றுள் நாமமும் ரூபமும் மாயையின் காரியங்கள் என்றும், மற்ற மூன்றும் பிரம்மத்தின் ஸ்வரூப லக்ஷணங்களாகும் சச்சிதானந்தங்கள் என்றும், ஆகையால் ஜகத்து உண்மையில் பிரம்மமே யாகும் என்றும் அறியப்படும்.

அது போலவே, இவ்வுலகத்தின் சிருஷ்டி ஸ்திதி லயங்களைச் செய்யும் ஈசன் மாயா விசிஷ்ட சைதன்யமென்றும், அவன் உலகத்திற்கு அபின்ன நிமித்தோபாதான காரணன் என்றும், அதனுள்ளும் அவனுடைய மாயா பாகம்-பிரபஞ்சத்திற்குப்

பரிணாமோபாதான காரணம் என்றும், சைதன்யம் விவர்த்தோபாதான காரணமென்றும், மாயாவி சிஷ்டனாகும் தன்மையால் நிமித்தோபாதான காரண மென்றும்; அவனுடைய உண்மைச் சொரூபத்தை ஆராய்ந்து பார்க்க, அவன் சச்சிதானந்த லக்ஷணங் களைச் சொரூபமாக உடைய அத்துவித பிரம்ம மென்றும் அறியப்படுகின்றான்.

ஈச்வரனுடைய சர்வக்ஞத்வாதி சிறந்த குணங் களுக்கு மாறான கிஞ்சிக்ஞத்வாதி குணங்களோடு கூடியிருப்பதாகக் காணப்படும் ஜீவனுடைய உண் மைச் சொரூபத்தை ஆராய, அவன் அஞ்ஞான விசிஷ்ட சைதன்ய மென்றும், அஞ்ஞானம், ஸ்தூல சூக்ஷ்ம சரிரங்கள், அவை தான் என்னும் அபிமான மாகிய ஜீவ பாவம் ஆகிய இவற்றால் அவன் ஈச்வர னின் வேறாகத் தோன்றினாலும், அவனுடைய உண்மைச் சொரூபமான சைதன்யத்தால் ஈச்வர சைதன்யத்தின் வேறு அல்லன் என்றும் தெளி வாக ஏற்படுகிறது.

இவ்வாறு எல்லாம் சச்சிதானந்த கனமான பிரம்மமாய் முடிய, ஜீவத்துவத்தோடு கூடியிருப்ப தாக நினைத்துக்கொண்டுள்ள முமுக்ஷு தனக்கு வேறு இருப்பு இல்லாது, "**நான் பிரம்மம் தான்**" என்னும் முடிவுக்கு வருகின்றான். துக்கத்திற்குக் காரணமான பிரபஞ்சமே இல்லாத பிரம்மம் தான் ஆனபோது தனக்குத் துக்கமேது? தானே ஆனந்த ஸ்வரூபம் என்று அறிகிறான்.

**உத்தமாதிகாரி**

இவ்வாறு குருமுகமாக அறியப்பட்டவுடன் உத்தமாதிகாரியான முமுக்ஷுவுக்குத் தான் பிரம்மம்

என்பது அனுபவத்திற்கு வந்துவிடும். அவன் முக்தி அடைந்தவனாகிறான். அதன் பிறகு அவனுக்குச் சந்தேகமே ஏற்படுவதில்லை. அவன் ஜீவன் முக்தனாய் விளங்குகிறான்.

**பிறர்க்கு ஞானம் வருவதில் தடை**

ஆனால் எல்லோரும் உத்தமாதிகாரிகளாக இருக்க முடியாது. நம்போன்றோர்க்கு மேற் சொன்னவை எளிதில் விளங்குவதில்லை. விளங்கினாலும் சந்தேகங்கள் எழுகின்றன; விபரீத எண்ணங்கள் தோன்றுகின்றன. இச்சந்தேக விபரீதங்களைப் போக்கிக்கொள்ள குருவாக்கியங்களும், சுருதி வாக்கியங்களும் உதவி செய்யும். அவற்றைக் கொண்டு நல்ல வழியில் யுக்தி செய்து, சான்றோருடைய அனுபவத்தில் நம்பிக்கை வைத்து, இடைவிடாது "நான் பிரம்மம், பிரம்மம் நான்" என்று மனனம் செய்து வந்தால், "நான் எவ்வாறு பிரம்மம் ஆக முடியும்" என்ற சந்தேகமும், "நான் ஜீவனே" என்ற விபரீத ஞானமும் அற்று இவற்றிற்குக் காரணமான அஞ்ஞானமும் நீங்கிச் சாதகன் பிரம்மமாகவே விளங்குகின்றான். மேற் கூறியவற்றை வேறுவிதமாகவும் கூறலாம். பிரம்மமாகிய தன்னை மறைத்து ஜீவனைக் காட்டுவது ஆவரணமாகும். அது அஸத்துவா பாதகம், அபானபாதகம் என இருவகைப்படும். "நான் பிரம்மமல்ல ஜீவனே" என்பது அஸத்துவா பாதகஆவரணத்தின் காரியமாம். அது குரு சாஸ்திர வாக்கியங்களை நம்பிக்கையுடன் சிரவணம் செய்வதால் நீங்கும். ஆனால் நான் பிரம்மம் என்று அநுபவமாக அறியப்படுவதில்லை. அது அபானபாதக ஆவரணத்தின் காரியமாம். இதுவே நீங்கப்பட வேண்டும். இதற்கு இடைவிடாது 'நான் பிரம்மம்,

பிரம்மமே நான்' என்ற மனனம் வேண்டும். இம்மனனத்திற்குப் பிரபஞ்சத் தோற்றமும், ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களின் தோற்றமும் இடையூருக இருக்கின்றன. இவையோ ஈச்வரனல் சிருஷ்டிக்கப்பட்டவை. அவை நிலைத்திருக்க வேண்டிய கால அளவுவரை தோற்றிக் கொண்டுதான் இருக்கும். ஆகையால் அவை ஒழிக்கப்படமாட்டா. அனல் ஜீவன் இவற்றுடன் நான் தனது என்ற அபிமானம் கொள்ளுதலே மேற்கூறிய ஞானத்திற்கு விரோதியாம். மேலும் அநேக ஜன்மங்களாகத் தன்னிடத்தில் இருந்து கோண்டுள்ள ஜீவபாவமோ, அதற்கு மாருன ஞானம் வந்தபொழுதும் தலைகாட்டிக் கொண்டுதான் இருக்கும். அதை ஒழிக்க நிதித்யாஸனம் வேண்டும். இந்த நிதித்யாஸன ரூபமாக உள்ளதுதான் நம் அஹங்கிரஹ உபாஸனே.

**ப்ரதீக உபாஸனே**

உபாஸனே இரண்டு வகைப்படும். அவை ப்ரதிக உபாஸனே, அஹங்கிரஹ உபாஸனே என்பனவாம்.

அன்னியத்தில் அன்னிய பாவனே வைத்தல் ப்ரதிக உபாஸனேயாகும். சாலக் கிராமத்தில் விஷ்ணு புத்தி வைத்துத் தியானித்தல் இதன்பாற்படும்; வைகுண்டத்தில் சங்கு சக்ர கதா தரனுய் விஷ்ணுவைத் தியானித்தலும் இதுவேயாகும். அல்லது அவரைத் தனக்கு அன்னியமாகத் தியானித்தலும் அதுவே யாகும்.

**அஹங்கிரஹ உபாஸனே**

தன்னுல் தியானிக்கப்படும் சகுணமான தெய்வத்தையோ அல்லது நிர்க்குணமான ஸ்வரூபத்தையோ தனக்கு அபின்னமாகத் தியானித்தல்

அஹங்க்ரஹ உபாஸனையாகும். அதாவது தன்னால் தியானிக்கப்படுவது தன் ஆத்ம ஸ்வரூபத்தைவிட வேறானது அல்ல, தானேயாம் என்று தியானித்தலாம்.

**இருவகைத் தியானங்களுக்கும் பொதுவான தர்மங்கள் :**

மேற்கூறிய இரு வகையான தியானங்களும் விதி, விச்வாசம், இச்சை, ஹடம் என்னும் நான்கினைப் பொருந்திருக்கின்றன.

இவற்றுள் **விதி** என்பது, குரு சாஸ்திரங்களால் இத்தெய்வத்தை இந்த ரூபமாக, இன்னவிடத்தில் இருப்பதாகத் தியானம் செய்யவேண்டும், இவ்வாறு செய்தால் இன்ன பயன் உண்டாகும் என்று சொல்லப்பட்டதாகும்.

அவ்வாக்கியங்களில் நம்பிக்கையுடைமை **விச்வாசம்** ஆகும்.

அவ்வாறு தான் தியானம் செய்து கூறப்பட்ட பயனை அடையவேண்டும் என்ற எண்ணமே **இச்சை**யாகும்.

அவ்வாறு தியானம் செய்யத் தொடங்கியபின், அது இடைவிடாது நடக்க மனதில் உள்ள உறுதியே **ஹடமாகும்.** அதற்கு விரோதமாக வருமவற்றைப் போக்குதலும், அதற்குச் சாதகமாகச் செய்யும் பாகிய பூஜை, சங்கீர்த்தனம், ஜபம் முதலானவை யெல்லாம் இதன்பாற்படும்.

**ப்ரதீக உபாஸனையின் பயன் :**

ப்ரதீக உபாஸனை செய்பவன் தெய்வத்தைத் தனக்கு அன்னியமாக உபாஸித்தலால், சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம் என்னும் கிரம முக்திகளில் ஒன்றை அடைவான். அவற்றுள்ளும்

பிந்தியவை ஒவ்வொன்றும் முந்தியவற்றை விடச் சிறந்தவையாம்; தியானத்தின் தீவ்ரத்தின் உயர்வால் பெறப்படுபவையாம்; சாதகன் இறந்த பிறகே மேற்கூறிய கிரம முக்திகள் அடையப்படுபவையாகும்.

இப்படிப் பெறப்பட்ட கிரம முக்தி நிலையற்றது; துக்கம் முற்றும் நீங்கப்பட்டது அல்ல. பேதத் தோற்றம் உடையது. பிறப்பு இறப்புக்களுடன் கூடியது; அதாவது புண்ணிய பலத்தால் சுவர்க்கம் அடைந்து புண்ணியமெல்லாம் கழிந்த பிறகு மறுபடியும் இவ்வுலகத்தை அடைபவர்களைப்போல் இவர்களும் தாம் அடைந்த உலகங்களிலிருந்து இவ்வுலகத்திற்கு வர நேரிடும்.

ஆனால், பல ஆஸக்தி ரஹிதமாக இவ்வுபாஸனையைச் செய்தால் புத்தியில் உள்ள மலமும் விக்ஷேபமும் நீங்கும். இவை நீங்கப்பெற்றவரையே **க்ருதோபாஸகர்** என்பர். இத்தகையோரே ஞானப்பியாசம் செய்வதற்குத்தக்க அதிகாரிகளாவர்.

**அஹங்கிரஹ உபாஸனையின் வகை:**

புனராவிருத்தி ரஹிதமான மோக்ஷத்தைப் பெறுவதே நமது லக்ஷ்யமாகும். இதற்கு அஹங்கிரஹத் தியானமே சிறந்த வழியாகும்.

இதுவும் சகுண மூர்த்தியைத் தனக்கு அபின்னமாகத் தியானித்தல் என்றும், நிர்க்குண பிரம்மத்தைத் தனக்கு அபின்னமாகத் தியானித்தல் என்றும் இருவகைப்படும். இவற்றுள் பின் கூறப்பட்டது முன் கூறப்பட்டதை விடச் சிறந்ததாகும்.

**தியானம் செய்தலின் அவசியம்:**

ஞான மாத்திரத்தினலே மோக்ஷம் கைகூடும்

என்றல்லவா சாஸ்திரங்கள் அறைகின்றன. அப்படியிருக்க இத்தியானத்தால் யாது பயன்? எனின், இது உண்மையே. ஆயினும் அதிகாரிகளின் தாரதம்மியத்தால் இவை தனியாகவும் பரம்பரையாகவும் மோக்ஷத்திற்குச் சாதகமாகின்றன.

**ஜீவப்பிரம்மைக்கிய ஸ்வருப அகண்டாகார விருத்தி ஞானமே மோக்ஷ சாதனமாம்.** அது சம்சய விபரீதங்கள் அற்ற நிலையாம். இது உத்தம மத்திம அதிகாரிகளுக்கே கைவரக்கூடியதாம். குருவினால் "**நீயே பிரம்மம்**" என்று உபதேசிக்கப்பட்ட உடனே "நான் பிரம்மம்" என்ற ஞானம் வந்து அகண்டாகார விருத்தி ஏற்படும் பேறு பெற்றவரே உத்தமாதிகாரிகளாவர்.

"நீயே பிரம்மம்" என்று குருவினால் உபதேசிக்கப்பட்டும், நான் எவ்வாறு பிரம்மம் ஆவேன் என்ற சந்தேகமும், நான் ஜீவன்தான் என்ற விபரீத ஞானமும் உடையவராய், அவற்றைப் போக்கிக்கொள்ள மனன நிதித்யாசனங்கள் செய்து அகண்டாகார விருத்தி ஞானம் பெறுபவரே மத்திமாதிகாரிகளாவர்.

இவ்விரு திறத்தாரும் முறையே முற்பிறவியிலோ இப்பிறவியிலோ தாம் செய்த நிஷ்காம கர்மங்களால் புத்தியில் உள்ள மலமும், உபாசனையால் புத்தியில் உள்ள விக்ஷேபமும் நீங்கப்பெற்றவர்கள்.

இனி, மோக்ஷேச்சையுடையவராய், குருவினால் நீயே பிரம்மம் என்று உபதேசிக்கப்பட்டும், வேதாந்த சாத்திரங்களைச் சிரவணம் செய்தும், சிறிது மனனம் செய்தும் தமக்கு ஏற்பட்ட முற்கூறிய சந்தேக விபரீதங்கள் நீங்காதவர்கள் அதமாதிகாரிகள். இவர்

களுக்கு நிதித்யாசனம் கைக்கூடுவதில்லை. இவர்கள் தாம் செய்யும் வேதாந்த விசாரத்தை விட்டுவிடக் கூடாது. லய சிந்தனையையும், அஹங்கிரஹத்தியானத்தையும் செய்யவேண்டும். இவர்களுடைய அஹங்கிரஹத் தியானத்திற்கு லய சிந்தனை ஸஹகாரியாகும்.

**நம் ஸ்ரீவித்யோபாஸனையும் அஹங்கிரஹ உபாஸனையே:**

சுருங்கக் கூறின், பிரம்ம ஸ்வரூபிணியாகிய சிச்சக்தியைத் தன் ஆத்மாவிற்கு அபின்னமாகத் தியானித்தல் ஈண்டு அஹங்கிரஹ த்தியானமாகும். அல்லது தன் ஆத்மாவேயாகும் சிச்சக்தியைப் பிரம்மத்திற்கு அபின்னமாகத் தியானித்தலும் இதுவே. இந்தத் தியானத்திற்கு ஜபம், தோத்திரம் பூஜை முதலிய மானஸிக, வாசிக, காயிக காரியங்களெல்லாம் ஸஹகாரிகளாம்.

ஆரூட ஞானி வேறு எந்த விவகாரங்களைச் செய்துகொண்டிருந்தாலும், எதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தாலும், எதைப்பற்றி நினைப்பதாக நமக்கு அனுமானத்தால் தோன்றினாலும், வறுக்கப்பட்ட விதை உண்பதற்கு உபயோகப்படுவதேயன்றி முளைப்பதற்கு உபயோகப்படாதது போலப் பிறப்பு இறப்புக்களுக்கு ஏதுவான கர்மபலமான அதிர்ஷ்டத்திற்கு ஸஹகாரியாகாத மனம் உடையவர். ஆதலால் அவை அவருடைய ஞானத்திற்குப் பாதகம் அல்ல. அவர்களுடைய திட ஞானம் பாதிக்கப்படாது. ஆனால் சாதகனுக்கோ தான் செய்யும் தியானத்திற்கு அனுகுணமாக வாக்கும் தேகமும் பிரவர்த்திக்க வேண்டும். தியானம் இடைவிடாது நடப்பதற்கு வாசிக காயிக கர்மங்கள் உதவி செய்யும்.

தியானம் செய்பவனாகிய சாதகனுடைய தியானாகார மனம், தியானக்கிரியை, தியானிக்கப்படும் பொருள் அல்லது தியேயம் என்னும் மூன்று பகுதிகள் தியானத்திற்கு உண்டு. மனம் தியேயாகாரமாக ஆகி, நிரந்தரமாக அந்நிலையிலேயே நிற்றல் இந்தத் தியானத்தின் முடிவாம். இதில் தியேயத்தின் ஸ்வரூபத்திற்கும் தியானம் செய்பவன் ஆத்மாவிற்கும் அபின்னமாக மேற்கூறிய நிலை இருக்குமாமின், அதுவே நாம் விரும்பும் அஹங்கிரஹத் தியானத்தின் பரிபாகாவஸ்தையாகும்.

ஈண்டு இது அறிதல் வேண்டும். இந்தத் தியானம் தியேயத்தையும் தியானிப்பவன் ஆத்மாவையும் ஒன்று சேர்த்தல் என்னும் கிரியை அல்ல. ஒன்று சேர்த்தல் என்பது உபசார மாத்திரமேயாகும். தியேயம் தன் ஆத்மாவாக விளங்குதல் இதன் முடிவாகும்.

இனி, நம் சித்சக்தியின் உபாஸனையை அஹங்கிரஹ உபாஸனையாக விளக்குவோம். எங்கும் வியாபகமாய்ச் சாமான்யமான பிரம்மம் சத்தாமாத்திரமாய் உள்ளது. இது, இது என்று அதன் சத்தை அறியப்படுகிறது. இதனையே காமேச்வரர் என்கிறோம். இதன் ஸ்பூர்த்தியே சித்சக்தியாகும். இதனையே விசேஷ பிரம்மம் என்பர். இதன் ஸ்வரூபம் சச்சிதானந்தமாம். இது, அத்யஸ்தமான நாமரூபங்களோடு கூடியதான பிரம்மாண்டத்தில் அஸ்தி பாதி பிரியங்களாகவும், அத்யஸ்தமான மாயையோடு கூடிய ஈச்வரனில் பிரம்ம சைதன்யமாகவும், பிண்டத்தில் சுத்த சத்வப்பிரதான அந்தக்கரண உபஹித கூடஸ்த சைதன்யமாகவும் விளங்குகின்ற அகண்ட ஞானமாகும்.

தனக்கு அன்னியமாக அறியப்படும் ஈச்வரனின் சாக்ஷிசைதன்யத்தையும், பிரபஞ்சத்தின் அஸ்தி பாதிபிரியத்தையும், தனக்குள் இருப்பதாக அறியப் படுவதும் தன் ஆத்மாவேயாவதுமான கூடஸ்த சைதன்யத்தோடு அபேதமாகச் சாதகன் பாவிக்க வேண்டும். இதுவே ஜீவப்பிரம்மைக்கிய போதக மான மகாவாக்கிய விசாரமாகும்.

நம் ஜபம் பூஜை முதலியவை. பெற்ற ஞானம் திடப்படுவதற்கு நானே பிரம்மம், பிரம்மமே நான் என்று பலமுறை மனனம் செய்யும் ஓதப்ரோத பாவத்தின்பாற்படும். சாதகன் தன் உபாஸ்ய மூர்த்தியின் ஸ்வரூபத்தைப் பரோக்ஷமாகக் குரு முகத்தினின்றும் சாஸ்திரவாயிலாகவும் நன்கு அறிய வேண்டும். தன் ஆத்ம ஸ்வரூபத்தையும் நன்கு அறிய வேண்டும். அவ்விரண்டுக்கும் சிறி தளவும் பேதமில்லை, அவை ஒன்றே என்று குரு சாத்திரங்கள் கூறுவதில் பூரண நம்பிக்கைவைக்க வேண்டும். இதனையேவிடாது சிந்தனை செய்ய வேண்டும். இச் சிந்தனையின் ரூபமாகவே நம் உபா ஸனை இருக்கின்றது.

மந்திரத்தைப் பலமுறை சொல்லுதல், உபாஸ்ய மூர்த்தியின் ஸகளத் தியானத்தைச் செய்தல், பாஹ்ய பொருளைக்கொண்டு உபாஸ்ய தேவ தையை ஆராதித்தல் ஆகிய இவை எவ்வாறு அஹங்கிரஹ உபாஸனையாகும் என்னும் ஐயம் ஏற் படலாம். இதற்குப் பின்வரும் சமாதானம் அறிதல் வேண்டும்.

**ஜபம்**

சாதகன் தான் ஜபம் செய்யும் மந்திரத்தின் பொருளைத் தெரிந்தே ஜபம் செய்யவேண்டும். ஒவ்

வொரு மந்திரமும் மஹாவாக்கியத்தின் அர்த்தத்தை உடையனவாகும். ஆகையால் அவற்றை பலமுறை ஜபம் செய்தல் அஹங்கிரஹ தியானமாகும்.

ஆனல், மஹாவாக்கியத்தையே சொல்லிக்கொண்டிருக்கலாமே; அதன் அர்த்தத்தையே அனுசந்தானம் செய்துகொண்டிருக்கலாமே! வெளிப்படையாக ஜீவப் பிரம்மைக்யத்தைக் கூறும் மஹாவாக்கியத்தை விட்டு இம்மந்திரங்களை ஜபித்தலால் பெறுபயன் யாது? அதிகச் சிரமமாகத் தோன்றுகிறதே, என்றிவ்வாறு சம்சயம் தோன்றலாம்.

மந்திரம் தேவதையின் வாச்சியமாகும். அதைச் சொல்லுவதால் அத் தேவதையைத் தோத்திரம் செய்வதாகிறது. ஆகையால் தேவதையின் அருள் பெறப்படுகிறது. தேவதையின் பிரஸாதத்தால் புத்தியில் உள்ள மலமும் விக்ஷேபமும் ஒழியும், விசாரத்துடன் மந்திரத்தைப் பலமுறை ஜபம் செய்தல் மஹாவாக்கியார்த்த நிரந்தர அனுஸந்தானரூப நிதித்யாஸனம் ஆகிறது.

நம் உபாஸனையின் எல்லா அம்சங்களும் இவ்வாறே சாதகனுக்கு இருவகைப் பிரயோசனங்களை அளிக்கின்றன. இவ்வுண்மையை ஒருவாறு ஆராய்ந்து பார்ப்போம்.

**நியாஸம்**

நியாஸம் செய்யும் பொழுது சாதகன் தன் ஸ்தூல தேகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு தேவதையைத் தியானம் செய்கிருன். அதனல் உபாஸ்ய தேவதையைப் பூஜை செய்வதற்கு வேண்டிய சுசித்தன்மை அவன் உடம்பிற்கு

ஏற்படுகிறது. இது உபாஸனையின் பொது தர்மம். சிவனுகிச் சிவனைப் பூசனைசெய் என்பது நியாயம். இதனுல் முதற் படியாகப் பிரதிக உபாஸனையின் பயனுகிய மல விக்ஷேபநாசம் ஏற்படுகிறது.

தான் தன் உடம்பின் ஒவ்வொரு பகுதியிலும் தியானிக்கும் தேவதையின் ஸ்வரூபத்தைப் பின் வருமாறு நிச்சயிக்கலாம். நியாஸம் செய்யும் இடத்திலுள்ள மனேவிசிஷ்ட சைதன்யம் அது என்றும், அதற்கும் சாக்ஷிசைதன்யத்திற்கும் பேதம் இல்லை என்றும் நியாஸம் செய்யும் பொழுதெல்லாம் பாவனை செய்துவரல் வேண்டும். அதனுல் தேகாத்ம புத்தி நீங்கும். தன் ஆத்மா சாக்ஷிதான் என்றும் அதன் ஸ்வரூபம் அந்தக்காண உபஹிதசைதன்யம் என்றும் ஏற்படுகிறது. இது த்வம்பத சோதனமாம்.

நியாஸம் செய்யும் போதெல்லாம், தான் நியாஸம் செய்யும் தேவதைகள் உபாஸ்ய தேவதையின் மயூகம் என்று பாவனை செய்துகொண்டிருந்தால், பரோக்ஷமாக நிச்சயிக்கப்பட்ட உபாஸ்ய தேவதையின் ஸ்வரூபமான மாயா விசிஷ்ட அல்லது உபஹித சைதன்யத்திற்கும் நியாஸ தேவதைகளுக்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லை என்றும், உபாதியினுல் தான் பேதம் ப்ரதிதியாகின்றதென்றும், உபாதி மாயாகாரியமும், அதனிடத்தில் உபாதித்வ புத்தி ஜீவ சிருஷ்டியும் ஆகும் என்றும், மாயாகாரியத்திற்குப் பாரமார்த்திக சத்தை இல்லை என்றும், ஜீவனுல் கற்பிக்கப்பட்ட அஹந்தா மமதாக்கள் உண்மை உணர ஒழியுமென்றும், அதனுல் தத்பதார்த்த சோதனத்தோடு, தத்துவம் பதார்த்தங்களுக்கு லக்ஷணையால் ஐக்கிய பாவனையும் சித்திக்

கின்றன. இவ்வாறு ந்யாஸம் செய்வதால் ஜீவப் பிரம்மைக்யானுசந்தானமும், அதைவிடாது செய்வதால் தத்ஸ்வரூப நிதித்யாஸனமும் சித்திக்கின்றன.

**பூதசுத்தி**

இனி, பூதசுத்தி செய்வதால் சாதகன் அடையும் பிரயோசனம் என்னவென்று கவனிப்போம்.

பூதசுத்தியில் 1. மூலாதாரத்தில் உள்ள ஜீவனைச் சுஷும்நா மார்க்கமாகப் பிரம்மரந்திரத்தை அடைவித்துப் பரமசிவனுடன் ஒன்றுனதாகப் பாவித்தல்.

2. சங்கோச சரீரத்தை உலர்த்துதலாகப் பாவித்தல்.

3. சங்கோச சரீரத்தை எரித்தலாகப் பாவித்தல்.

4. அந்தச்சாம்பலைப் பரமசிவ அம்ருதத்தால் நனைப்பதாகப் பாவித்தல்.

5. அதனுல் சாம்பவ சரீரம் உற்பத்தியானதாகப் பாவித்தல்.

6. ஜீவன் சுஷும்நா மார்க்கமாய் மறுபடியும் மூலாதாரத்தை அடைந்ததாகப் பாவித்தல்—என்னும் ஆறு பகுதிகள் உண்டு.

அவற்றிற்கு முறையே இவ்வாறு பொருள் கொள்ளல் வேண்டும்.

1. தத்துவமஸி என்னும் மஹாவாக்கியத்திற்கு இலக்கணையால் பொருள் கொள்ளுதல்.

2. ஸ்தூல (அல்லது சூக்ஷ்ம) தேகமே ஆத்மா என்னும் புத்தி நீங்க அதனிடத்தில் துச்ச புத்தி உண்டாகி, அதனால் அதனிடத்தில் எனது என்னும் பற்றுக் குறைதல்.

3. பற்று அறவே நீங்குதல்.

4. அச்சரீரங்களிடத்தில் அஸ்தி பாதி பிரியங்களைப் பார்த்தல்.

5. அதனால் அவை அசுசி என்ற எண்ணம் நீங்க அவற்றினிடத்து உயர்ந்த எண்ணம் ஓங்குதல்.

6. (இப்பகுதிக்கு ஹம்ஸம் மந்திரம் ஆகையால்) ஈச்வரனுடைய சமஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களோடு ஜீவனுடைய வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களுக்கு ஐக்கியம் இருத்தலைக் காணுதல். (ஒரு தோப்புக்கும் அதில் உள்ள ஒரு செடிக்கும ஐக்கியம் இருப்பது போல்.) ஆகையால் கிஞ்சிக்ஞத்வாதி தர்மம் தனக்கு உண்மையில் இல்லாததை அறிந்து தனக்கும் சிவத்திற்கும் அத்யந்த அபேதம் இருத்தலை அறிகின்றான். ஆகையால் தான் சிவம் என்ற எண்ணம் திடப்படுகிறது. அதனால் சிவனை ஆராதிக்கத் தகுந்த சரீரம் உடையவன் ஆகின்றான்.

இப்பாவனையோ பிரணவ உபாசனையில் குறிக்கப்பட்ட பாவனை போன்றது. ஆதலால் இதுவே திடப்பட்டு அபரோக்ஷ ஞானத்தையும் கொடுக்கும்.

இப்பூத சுத்தியின் பயனாகச் சாதகன் தன் தேகத்தைப் பற்றிக்கொள்ளும் பாவனைக்கும் சாதாரணமாக வேதாந்தக் கிரந்தங்களில் கூறப்பட்டிருப்பதற்கும் ஒரு வேறுபாடு உண்டு. வேதாந்த நூல்களில், தன்னுடைய ஸ்தூல தேகத்தில்

ஜீவனுக்கு ஆத்ம புத்தியும் மமகாரமும் இருத்தலை நீக்குதற்கு அதன் அழியும் தன்மையும், அதன் துச்சமான தன்மையும் மிகவிரிவாக விளக்கப்பட்டிருக்கும். இவவாறு தோஷ திருஷ்டி மாத்திரம் இருக்குமே தவிர, அந்த ஸ்தூல தேகமும் சுத்தமானது தான், அதனால் ஜீவனுக்கு யாதொரு கெடுதியுமில்லை என்னும் சிறந்த கொள்கை காண முடியாது. அண்டத்தைப்போலவே பிண்டமும் ஈச்வர சிருஷ்டியாகும் பஞ்சபூதங்களின் பரிணமமாம். அதனால் நமக்கு யாதொரு கெடுதியுமில்லை. அது சுத்தமானதே. அது ஈசனை உபாசிக்கச் சாதகனுக்குக் கொடுக்கப்பட்டதாகும். மேலும் ஈசனுக்கு ஆலயமாக உள்ளதாம்; அதனைப்போற்றி, மோக்ஷம் அடைவதற்குச் செய்யும் சாதனையில் அதனைச் சஹகாரியாகக் கொள்ளவேண்டும். இவ்வாறு கொள்ளும் கொள்கை **சாக்தர்களின்** கொள்கையாகும். சீர்தூக்கிப் பார்க்கின் இது முன்னையதைவிடச் சிறந்த கொள்கையாகும்.

இவ்வாறு சாதகன் தன் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களிடத்தில் சிறந்த மதிப்பை உடையவனாகின்றான். அதனால் அவன் தேவதையை உபாசிக்க அதிகாரியாகின்றான். இதுவே அவனுடைய சரீரம் **சாம்பவ சரீரம்** ஆகியது என்பதன் பொருளாம்.

சாம்பவம் என்றால் சம்புவின்கண் உள்ள பாவம் என்பது பொருள். அது சிவாபின்னசித் சக்தியைக் குறிப்பதாகும். ஆத்மாவில் ஜீவபாவம் அத்யஸ்த மாயுள்ளது. ஜீவனுக்கு ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களிடத்தில் அஹங்கார மமகாரங்கள் உடைமையே அத்தேகங்களுக்கு அசுசித்தன்மை

யாம். இது, நான்ஜீவன் என்ற எண்ணத்தால் ஏற்பட்டதாகும். ஜீவபாவமோ அத்யஸ்தம், ஜீவ பாவமில்லாத ஆத்மாவே சித்சக்தியாகும். அச் சித் சக்திக்கு இருப்பிடமாக இச்சரீரங்களைக் கொள்ளு தல் தன் சரீரம் சாம்பவசரீரம் ஆயினமையாம். ஆகையால் அச்சரீரம் தேவதோபாசனைக்குத் தகுதியானது ஆகும். மேற்கூறிய பாவனைகளோடு பூதசுத்தி செய்தால் அது தத்துவம் பதார்த்த சோதனைக்குச் சஹகாரியாகும்.

**குரு ஆத்ம யஜனங்கள் :**

இனி, விசேஷார்க்கியப் பிரதிஷ்டையின் முடி வில் செய்யப்படும் குரு ஆத்ம யஜனங்களைச் சற்று ஆராய்வோம். இவற்றுள் குருயஜனம் தத்பதார்த்த சோதனமும், ஆத்மயஜனம் த்வம்பதார்த்த சோதன மாம்.

**குரு யஜனம் :**

குருயஜனம் செய்யும்போது சாதகனுடைய சாஸ்திர அறிவுக்கும் மன நிலைக்கும் ஏற்றவாறு பாவனை உண்டாகும்.

குரு ஈச்வரனின் அவதாரம், தன்னை உய்விக் கவே ஈசன் மானிட வேடங்கொண்டு வந்துள்ளார். அவருக்குப் பூஜை செய்தல் ஈசனை உபாஸித்தல் ஆகிய இரண்டும் ஒன்றே. அவர் திருப்தி அடைந் தால் ஈசனும் திருப்தி அடைவான். ஈசன் கோபித் தால் அதனால் ஏற்படும் துன்பத்தைக் குருவினால் தீர்க்கமுடியும். ஆனால் குருவின் கோபத்தால் ஏற்படும் துன்பத்தை ஈசனாலும் தீர்க்கமுடியாது. ஈசன் இகலோக பரலோக சுகங்களைத் தருவார். ஆனால் குருவோ அவற்றின் மேலான ஞானத்தை

அளிப்பார். ஆகையால் குரு ஈசனின் மேலானவர். இத்தகைய எண்ணங்கொண்டு குரு யஜனம் செய்தல் எல்லாச் சிடர்களுக்கும் சாமானியமாக உரியதாம். இதனுல் ஈச்வர உபாஸனையின் பயனுகிய மலவிக்ஷேபங்களின் நீக்கம் பெற்று, அதன்வாயிலாக ஞானம்பெற அடிகோலப்படுகிறது.

சாதகனுன சிடன் குருயஜனம் செய்யுங்கால் பின்வரும் பாவனை உடையவனுகின்ருன். குரு ஈச்வர ஸ்வரூபன். தத்பதவாச்சியன். குருயஜனம் செய்தல் என்பது தத்பத சோதனமாகும். தத்பத வாச்யார்த்தம் மாயா விசிஷ்ட காரணேச்வரன். அவனுடைய உண்மை ஸ்வரூபம் சுத்த சேதனமாம். மாயை அதனிடத்தில் அத்யஸ்தமாக உள்ளது. ஈசனுக்குத் தன்னிடமுள்ள மாயையால் ஸ்வரூபத்தின் ஆவரணம் இல்லை. இவ்வாறெல்லாம் பாவனை செய்வதால் தத் பதம் நன்கு விமர்சிக்கப்பட்டது ஆகும்.

**ஆத்ம யஜனம்**

ஆத்ம யஜனமோ முற்கூறியவாறு த்வம் பதார்த்த சோதனமாம். இதில் சாதகன் தன் உடம்பில் இருப்பதாகப் பாவனை செய்யப்படுகிற மூலாதாரத்தில் அதிசூக்ஷ்மமாய் ஜ்வலித்துக் கொண்டிருப்பதாய்ச் **சிதக்னி மண்டலம்** என்பதொன்று இருப்பதாகவும், அதில் அதிஷ்டிதமாய்க் குண்டலினி சக்தி இருப்பதாகவும் தியானம் செய்கிருன். பின் **புண்யம், பாபம், க்ருத்யம், அக்ருத்யம் ஸங்கல்பம், விகல்பம், தர்மம், அதர்மம்** ஆகியவைகளை அந்தக் குண்டலினி சக்திரூப சிதக்னியில் ஹோமம் செய்வதாகப் பாவிக்கிருன். பின் அதர்மமாகவும்

உள்ளதை ஹோமம் செய்வதாகவும் பாவிக்கிறான். முன்செய்த வினைப் பயன்களெல்லாம் பிரம்மார்ப்பணம் செய்வதாகப் பாவிக்கிறான்.

இப் பாவனைகளுக்குப் பின்வருமாறு பொருள் கொள்ளல் வேண்டும்.

துவம்பத வாச்யமாகும் பிரமாதா சிதக்னி மண்டலத்தில் அதிஷ்டித்துள்ள குண்டலினி சக்தியாகும். அந்தக்கரண விசிஷ்ட சைதன்யமே பிரமாதாவாகும். அந்தக்காணமோ சாக்ஷி சைதன்யத்தில் அத்யஸ்தம். அந்தக்கரணம் சிதக்னி மண்டலமாம். அந்தக்கரணத்திற்கு அதிஷ்டானமாயுள்ள சாக்ஷி சைதன்யமே குண்டலினி ரூப சித்சக்தியாகும். புண்ணியம் முதலாக ஹோமம் செய்யப்படும் எட்டும் அந்தக்கரணத்தில் வாஸனா ரூபமாக இருப்பவை. அவை சஞ்சித கர்மத்தில் முளைத்தவை; அதனால் போஷிக்கப்படுபவை. நான் ஜீவன் என்னும் எண்ணத்தை உண்டாக்குபவை; ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கும் அஞ்ஞானத்திற்குத் துணை புரிபவை. இவை சாக்ஷி சைதன்யத்தில் அத்யஸ்தம் என்றும், இவற்றிற்கு அதிஷ்டானம் சாக்ஷியே என்றும், திடமாக அறிதலே இவற்றை ஹோமம் செய்வதாகப் பாவித்தலாம். ஜீவ பாவத்திற்கு அஸ்திவாரமாக இருக்கும் இவை வெறும் கற்பனையாக முடிய ஜீவ பாவமும் கற்பனையாய் முடியும். ஆகையால் ஆன்மா புண்யம் முதலிய எத்தர்மமும் இல்லாத சுத்த சாக்ஷி சைதன்யமாய் விளங்கும். அத்தகைய ஸ்வரூபத்தை அதர்மம் (தர்மம் சிறிதும் இல்லாதது) என்று கூறலாம். ஆத்மாவோ உபாதியை நோக்க உபகிதம் என்றும், விசேஷணத்தை நோக்க விசிஷ்ட மென்றும், தர்

மத்தை நோக்கத் தர்மி என்றும் வியவஹாரிக்கப் படுகிறது. விசேஷணமும், உபாதியும், தர்மமும் கற்பிதமாய் முடிய ஆத்மாவை விசேஷணம் இல்லாத தென்றும், உபாதி இல்லாத தென்றும், தர்மம் இல்லாத தென்றும் கூறுதலும் வீணேயாம். அதாவது ஆத்மா தர்மம் இல்லாதது என்றும் சொல்ல வேண்டாததாய் மனம் வாக்குக்களுக்கு எட்டாத நிலேயை யுடையதாகிறது. இவ்வாறு பாவனை செய்தலே இரண்டாம் தரமாக அதர்மமாக உள்ளதை ஹோமம் செய்வதாகக் கூறப்பட்டது.

இவ்வாறு தன் ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவன் உண்மை ஞானியாவான். இந்த ஞானமாகிய அக்னியில் பிராரப்தம்,ஆகாமியம், சஞ்சிதம்என்னும் மூன்று கர்மங்களும் அழியும். ஆனந்த ஸ்வரூபமான தன் ஆத்மாவிலேயே நிலேத்திருக்கும் ஞானிக்குப் பிராரப்தத்தால் சுகதுக்க அனுபவம் இல்லே. ஞானம் வருவதற்குமுன் செய்யப்பட்ட கர்மங்களான ஆகாமியமும், சஞ்சித மூட்டையும் ஞானத்தால் அழிகின்றன. இதை விளக்கும் பாவனேயே "இதப்பூர்வம்" என்று தொடங்கும் பூர்ணஹுதி மந்திரத்தின் பொருளாம்.

இவ்வாறு ஆத்மயஜனம் செய்வதால், நான் அஞ்ஞானி அல்ல-ஜோதிர் மயமான அறிவு ரூபம்; ஜீவனல்ல - பிரம்மமே; அஹம் அஹம் என்று ஸ்புரணமாய் இருக்கும் சாக்ஷி; இந்த அஹம் என்னும் ஸ்புரணமும் லீனமாய் உள்ள கேவல ஸ்வரூபம் என்ற பாவனுவடிவான துவம்பத லக்ஷ்யார்த்தம் சித்திக்கின்றது. இது "ஆர்த்ரம் ஜ்வலதி" என்று தொடங்கும் ஹோம மந்திரத்தால் பெறப்பட்ட பொருளாம்.

**சதுர்நவதி மந்த்ரங்கள் :**

அத்வைதத்திற்கு அடிப்படை ஜகத் ஜீவ பரங்களின் விசாரமாகும். இவற்றுள் குருயஜனத் தால் பரத்தின் விசாரமும், ஆத்மயஜனத்தால் ஜீவ விசாரமும் பெறப்பட்டன. எஞ்சியதான ஜகத் விசாரம் விசேஷார்க்கியத்தை அபிமந்த்ரணம் செய் யும் சதுர்நவதி மந்த்ரங்களால் பெறப்படுகின்றது.

பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்படவேயில்லை. அதா வது பிரபஞ்சம் முக்காலத்திலும் இல்லை. இருப்பது பிரம்மம் ஒன்றே. இத்தகைய கொள்கையை **அஜாதவாதம்** என்பர். இது அத்வைத சாஸ்திரத் தின் உத்க்ருஷ்ட சித்தாந்தமாகும். இது உத்த மாதிகாரி விஷயமாகும்.

இப்பிரபஞ்சம் காணும் பொழுதுதான் இருக் கின்றது. அது காணப்படுவது ஆத்மாவில் அத் யஸ்தமாயுள்ள அஞ்ஞானத்தின் காரியமாகும். காண்பதற்கு முன்னும் பின்னும் பிரபஞ்சம் இல்லை. இதைத் **திருஷ்டி சிருஷ்டிவாதம்** என்பர். சூக்ஷ்ம மான மனம் உடையவர்களுக்கே இது விளங்கும். இது மத்திமாதிகாரிகளின் விஷயமாகும்.

இனி, அதமாதிகாரிகளின்பொருட்டுக் கூறப் பட்ட **சிருஷ்டி திருஷ்டி** வாதம் ஈண்டுக் கூறப்படும். இதற்கு, ஏற்கனவே ஈச்வரனால் சிருஷ்டிக்கப்பட்டு இருக்கின்ற பிரபஞ்சத்தை ஜீவன் அறிதல் என் பது பொருள். இதில் பிரபஞ்ச சிருஷ்டிக்கு ஓர் கிரமம் வகுத்துக் கூறப்படும். ஆத்மாவில் உண் மையில் இல்லாத பிரபஞ்சம் இருப்பதுபோல் ஆரோபம் செய்யப்படுவதாய்ப் பற்பல சாஸ்திரங் களில் பற்பலவிதமாகச் சிருஷ்டியின் கிரமம் கூறப் பட்டுள்ளது. சிருஷ்டியின் கிரமத்தை அறிதல்

அதனை அபவாதம் செய்தற்பொருட்டேயாகும்; அதாவது பிரபஞ்சத்தின் மித்யாத்வத்தை நிச்சயம் செய்து உண்மையில் இருப்பது அஸ்தி பாதி பிரிய ரூப பிரம்மமே என்று நிச்சயம் செய்தலாம். ஆகையால் எச்சாதகனுக்கு எந்தக்கிரமம் விளங்குகின்றதோ அவனுக்கு அது ஏற்றதாகும். ஒரு கிரமம் சரி மற்றொன்று தவறு என்ற விவாதம் வேண்டியதேயில்லை.

ஜீவர்களின் அதிர்ஷ்ட ரூபமான கர்மங்கள் பயன்கொடுக்க உன்முகமாகும்பொழுது மாயா விசிஷ்டகாரணேச்வரன் சிருஷ்டி செய்ய முற்படுகின்றான். அவனுக்கு முதலில் இனிமேல் சிருஷ்டிக்கப்படவேண்டிய பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானமும், பின் அதைச் சிருஷ்டிக்கவேண்டும் என்னும் இச்சையும், அதன்பின் சிருஷ்டி செய்யத் தொடங்கப் பிரயத்தனமும் உண்டாகும். இந்த ஞானேச்சாகிரியைகள் மாயையின் காரியங்களாம். இவை முறையே அக்கினி சூரிய ஸோம கலைகளால் குறிக்கப்படுகின்றன.

பின்னர் ஈசனின் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்ரகம் என்னும் பஞ்சக்ருத்யங்களைச் செய்யும் காரியப் பிரம்மங்களின் சிருஷ்டி பிரா்ம, விஷ்ணு, ருத்ர, ஈச்வர, சதாசிவர்களின் கலைகளால் குறிக்கப்படுகிறது,'

பின் மூலமந்திரத்தால் சப்த சிருஷ்டியும், அதன் பின் வரும் ஐந்து மந்திரங்களால் பஞ்ச பூதங்களும், பஞ்ச பூதங்களாலான சூக்ஷ்ம ஸ்தூல, வியஷ்டி சமஷ்டி சரீரங்களான பிரம்மாண்ட பிண்டாண்டங்களின் சிருஷ்டியும் குறிக்கப்படுகின்றன.

இச்சிருஷ்டியெல்லாம் மாயாபரிணுமமும் சித் விவர்த்தமும் ஆகும். உண்மைஸ்வரூபம் ஆராய்ந்து பார்க்க இவையெல்லாம் பிரம்மமே என்ற நிச்சயமே நாம் இங்குக் கொள்ளவேண்டிய அபவாதமாம். இது தான் ஜகத்தின் சோதனமாம். இதன் பயன் பின் வருமாறு.

ஜீவன் இந்த ஜகத்துடன் தனக்குச் சம்பந்தம் உண்டு என்று நினைக்கின்ருன். அதனிடத்தில் அகங்கார மமகாரங் கொள்கின்ருன். அதனல் இன்ப துன்பங்கள் அடைகின்ருன். துக்கத்தி னின்று நீங்குதற்கு முயலுகின்ருன். அதனல் புண்ணிய பாவ எண்ணங்களும், அவற்றைச் செயல் படுத்தும் கிருத்திய அகிருத்தியங்களும், அவற் றைப் பற்றி மேன்மேல் முளைக்கும் சங்கல்ப விகல்பங் களும், அவற்றின் பயனுய் ஜன்மங்களுக்குக் காரண மாய் உள்ள தர்ம அதர்மங்களும் அவனிடத்தில் ஏற்படுகின்றன. இவ்வாறு சம்சாரச் சுழலில் அகப் பட்டு அல்லல் படுகின்ருன்.

இப்பிரபஞ்சம் ஈச்வரனல் சிருஷ்டிக்கப்பட்டது; பஞ்ச பூதங்களின் காரியம். இதை அனுபவிக்கும் இந்திரியங்களால் பெறப்படுவன பஞ்ச பூதங்களின் குணங்களான சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களே. அவை சாதகமாகவோ பாதகமாகவோ இருப்பதாக ஜீவன் கொள்ளுவது ஜீவனது சிருஷ்டியேயாகும். விரும்பும் பிரபஞ்சப் பொருள் தன்னை விட்டு நீங்கிய தால் பெறுவது துக்கம். அதைப்பெறும் பொழுது ஆனந்தம் உண்டாகிறது. இது விஷயானந்தமாகும். உண்மையில் விஷயங்களில் ஆனந்தமே இல்லை. இந்த ஆனந்தமோ சத்துவப் பிரதான அந்தக்

கரணத்தில் ஆத்மாவின் ஸ்வரூபமான ஆனந்தத்தின் பிரதிச் சாயையாம்.

இவ்வாறு அறிவதால் விஷயங்களில் ஆனந்தம் உண்டு என்ற எண்ணம் நீங்கும். ஆகையால் விஷயங்களில் பற்று நீங்கும். அவற்றின் உண்மை ஸ்வரூபம் விளங்கும், தன் ஆன்மாவே இவ்வெல்லாமாக விளங்குகிறது என்ற ஞானமுண்டாகும்.

மேற்கூறிய பாவனையோடு விசேஷார்க்கியத்தை அபிமந்த்ரணம் செய்தல் வேண்டும், இப்பாவனை இல்லாது அபிமந்த்ரணம் செய்யினும் ஓர் அளவு பயன் உண்டு.

பிரபஞ்சாகாரமாக உள்ள ஈச்வரன் வன்னி சூரிய சோம வடிவமாக உள்ளான். அவனையும் காரிய பிரம்மங்களையும் உபாசித்தலால் பிரதிக உபாஸனையின் பலமும், கடைசி ஐந்து மந்திரங்களால் அபிமந்த்ரணம் செய்தலால் த்ரவ்யங்கள் பூசை செய்வதற்கு உரிய சுத்தத் தன்மை அடைந்தமையாகிய பயனும் ஏற்படுகின்றன. ஞானம் என்னும் உத்தமமான பயன் இல்லாவிட்டாலும், பாவனை இன்றிச் செய்வதும் வீணாகப் போவதில்லை.

**ஞேயமும் தியேயமும்**

அஹங்கிரஹத் தியானத்திற்குப் பிரம்மம் முதலில் தியேயம் ஆகவேண்டும்; அதாவது தியானத்திற்கு விஷயம் ஆகவேண்டும். பிரம்மமோ நிர்குணமானது; நிஷ்களமானது. ஆகையால் அது தியேயமாகாது. அது ஞேயமாகும்; அதாவது ஞானத்திற்கு விஷயமாகும். ஞான ஸ்வரூபமாக உள்ள பிரம்மத்தை ஞான விஷயமாகும் என்று கூறுவதும் உபசாரமே. ஆயினும் சுத்த சத்துவப் பிரதான அந்தக் கரணம்

பிரம்மாகாரமான அகண்ட விருத்தியாகும் பொழுது பிரம்மத்தை மறைக்கும் மூலாஞ்ஞானத்தை அது அழிக்கின்றது. அப்பொழுது ஸ்வயம் பிரகாசமாய் உள்ள பிரம்மம் தானே பிரகாசிக்கின்றது. இது தான் பிரம்மத்திற்கு ஞேயமாகும் தன்மையாம்.

இந்த ஞேயத்தைத் தியேயமாக்கி அந்தத் தியேயத்தை ஆத்மாவாகிய சாக்ஷி சைதன்யத்திற்கு அபேதமாகப் பாவித்தல் அஹங்கிரஹ உபாஸனையாம்.

ஞேயம் எவ்வாறு தியேயமாகும்? பிரம்மம் நிர் அவயவி. ஆகையால் அது ஒரு தன்மையிலிருந்து மற்றொரு தன்மை அடையாது. ஆயினும் பிரம்மத்தைத் தியானத்திற்கு விஷயமாக்கிச் சாத்திரங்களில் கூறியிருப்பது பாவனா விஷயமாகும். சாதகனுடைய பாவனா தார்ட்யத்தால் பெறப்படுவதாகும்.

**மூர்த்தி கல்பனை :**

இந்த அஹங்கிரஹ உபாஸனைக்குத் தகுதியாகப் பிரம்மத்தைத் தியேயமாக்குவதில் மூன்று படிகள் காணலாம். முதலாவது **மூர்த்தி கல்பனம்.** இரண்டாவது **தியானம்.** மூன்றாவது **ஆவாஹனம்.** நிர்க்குணமும், காலதேச வஸ்துக்களால் பரிச்சின்னம் ஆகாததுமான பிரம்மத்தைக் கரசரணாதி அவயவங்களோடு கூடியதாய்ப் பாவிக்க முதலில் அதனிடத்தில் மூர்த்தி கல்பனை செய்தல்வேண்டும். அதாவது பிரம்மத்தைச் சகுண நிராகாரமான ஈச்வரனாகப் பாவிக்கவேண்டும். ஈச்வரனே ஆபாஸ ஸஹித சுத்தசத்துவப் பிரதான மாயாவிசிஷ்ட சைதன்யம். ஆகையால் சத்தாமாத்திரமான பிரம்மத்தில் மாயை அத்யஸ்தமாக உண்டாகியது என்

றும், அந்த மாயையில் பிரம்மம் பிரதிபலித்து ஆபாஸம் உண்டாகியது என்றும், அந்த ஆபாஸ ஸஹித மாயா விசிஷ்ட சைதன்யமே மேற்கூறிய சகுண நிராகார ஈச்வரன் என்றும் பாவித்தல் வேண்டும். இப்பாவனையே மூர்த்தி கல்பனையாகும்.

இவ்வாறு பாவிப்பதால் உண்டாகும் பயன்:— பிரம்மத்தினிடத்தில் ஈசத்வம் கற்பனையே. அது உண்மையில் ஜீவனுடைய கற்பனையே. சாதகனுக்கு எதுவரையில் தன்னிடத்தில் ஜீவத்துவ ப்பிராந்தி உண்டோ அதுவரையில் பிரம்மத்தினிடத்தில் சாபேக்ஷிகமாக ஈசத்வம் உண்டு. ஜீவ பாவம் ஆத்ம விசாரத்தினல் நீங்க அவன்பொருட்டு ஈச்வரன் இல்லையாகின்ருன். அதாவது ஈச்வரனிடத்தில் இவனுக்கு இருந்த பரோக்ஷத்வப் பிராந்தி நீங்கி, ஈச்வர சைதன்யத்திற்கும் தன் ஸ்வரூபமான சாக்ஷி சைதன்யத்திற்கும் அபேத நிச்சயமான அபரோக்ஷ ஞானம் உண்டாகிறது. இதுவே மூர்த்தி கல்பனையில் வியதிரேக பாவனையின் பலமாம்.

இதற்குக் கூறப்பட்ட மூன்று பீஜங்களுள், மாயா பீஜத்தால் மாயையும் லக்ஷ்மீ பீஜத்தால் ஆபாஸமும் பரா பீஜத்தால் சுத்த சைதன்யமும் குறிக்கப்படுகின்றன. மேலும் இது கற்பனையே. பாரமார்த்திகம் அல்ல என்பதைக் குறிக்கக் கல்பயாமி என்றும், ஆனல் அதன் உண்மை ஸ்வரூபம் என்னவென்று ஆராயச் சைதன்யமாய் முடிவதால் சைதன்யமூர்த்தி என்றும், ஆயினும் சாதகனுக்குப் பிரபஞ்சத் தோற்றம் இருக்கும் வரையில் அந்த ஆபாஸத்திற்கும் வியாவஹாரிகசத்தை உண்டென்று காட்ட அம்ருதம் என்றும், இந்தச் சைதன்

யம்தான் லலிதை என்றும் மூர்த்தி கல்பன மந்திரத்தில் குறிக்கப்பட்டது அறியத்தக்கது.

பிரசங்கானுசாரமாக ஓர் உண்மை சொல்ல வேண்டியிருக்கிறது. பிரம்மத்தினிடத்தில் மாயை ஆச்ரயித்திருக்கிறது என்று சொல்வது கற்பனையே. பாரமார்த்திகத்தில் மாயையும் இல்லை. ஒன்றினிடத்தில் இல்லாததை அதனிடத்தில் இருப்பதாகக் காண்பதும் சொல்லுவதும் அத்தியாசமாகும். அதனால்தான் மாயை பிரம்மத்தினிடத்தில் அத்தியாசமாகத் தோன்றியுள்ளது என்கிறோம். மாயையோ ஜடம். அதன் ஸாபேக்ஷிகமாகச் சத்தாமாத்திர பிரம்மத்தைச் சித்து என்கிறோம். மாயையால்தான் பிரம்மத்தினிடத்தில் சித் ஸ்புரணம் உண்டு. இதுதான் விமர்சம். மாயை இல்லாதபொழுது அது பிரம்மத்தில் லீனமாயிருக்கும். ஆகையால்தான் மாயை சின்மாத்திரத்தை ஆச்ரயித்துத் தன்னிடத்தில் அந்த விளக்கம் இருப்பதாகக் காட்டிப் பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமாகியுள்ளது. இந்தச் சிருஷ்டிக்கு முதற்படி சகுண நிராகாரமான ஆபாஸ ஸஹித மாயா விசிஷ்ட சைதன்யமான ஈச்வரன். ஆகையால்தான் அவன் தத்துவங்களில் முதலாவதாகக் கூறப்பட்டான்.

**தியானம்:**

இந்த ஈச்வரனே கரசரணாதி அவயவங்களோடு கூடியதான சகுணசாகாரமாகத் தியானிக்கப் படுகிறான். பக்தன் தன் உபாஸ்ய தேவதையின் சகளரூபத்தைக் குரு சாஸ்திரங்களின் வாயிலாக நிச்சயித்து அதை ஹ்ருதயத்தில் தியானிக்கின்றான். அவன் மனம் அந்த உருவத்தை அடைகின்றது. ஈச்வரன், தியானிப்பவன் செய்யும் தியானத்திற்குத்

தகுந்தாற்போல் ஹ்ருதயமாகிய தாமரையில் விளங்குகிறான் என்று சாஸ்திரங்கள் கூறுவது இதுவேயாம். இது முற்றிலும் ஜீவனுடைய கற்பனையே. மனத்தில் கற்பிக்கப்பட்ட இதன் ஸ்வரூபம் தத்ரூபபரிணாமம் அடைந்த அந்தக்கரண விசிஷ்ட சைதன்யம். ஆகவே, உண்மையில் பிரமாதாவிற்கும் தியானிக்கப்பட்ட உபாஸ்ய தேவதைக்கும் ஸ்வரூபத்தில் சிறிதளவும் பேதமில்லை. இவ்வுண்மை அறிந்து தியானம் செய்தால்தான் அனுக்கிரஹத் தியானம் கிட்டும். இங்கு ஜீவன் செய்யும் கற்பனையானது தன் இஷ்டப்படி செய்யப்பட்டதல்லவாதலாலும், குருசாஸ்திரங்களால் நிர்ணயிக்கப்பட்டவாறு தியானிக்கப்பட்டதாதலாலும், அவன் சிந்தனை செய்யும் ஸ்வரூபமானது, பக்தனை அனுக்ரஹிக்கும் பொருட்டு லலிதை தன்னுடைய லீலையால் எடுத்துக்கொண்ட ஆகாரம் என்று சிறப்பாகக் கூறப்படுகிறது. உபாஸ்ய தேவதையின் ஸகள ஸ்வரூபத்தில் கௌரவபுத்திவைத்தல் பக்தியின் வளர்ச்சிக்கு உதவி செய்யும். அதனால் மலவிக்ஷேபங்களின் நீக்கம் உண்டு. மனம் ஸ்திரம் அடையும்.

**ஆவாஹனம்**

உச்வாச நிச்வாச ரூபமான பிராணனுக்கும் மனத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பிராணனை அடக்கவே மனமும் அடங்கும். பிராணன் பகிர்முகமாகும்பொழுது மனமும் பகிர்முகப்படும். தியான ரூபக்கிரியையோடு கூடிய மனத்தைவெளிச்செல்லும் பிராண வாயு வழியாக வெளிப்படுத்தி த்ரிகண்டா முத்திரையோடு கூடிய கரதலத்தின் மத்தியில்வைத்து, அதை அந்த மூன்று கண்டங்

களின் வழியாகப் பரிணமிக்கச்செய்து, அங்குள்ள புஷ்பங்களின் வழியாக உபாஸனையின் பொருட்டு எதிரில் வைக்கப்பட்டுள்ள யந்திரம் அல்லது மேரு அல்லது பிம்பத்தில் சேர்ப்பதுபோல் பாவித்தல் ஆவாஹனம் செய்தலாம்.

மனத்திலேயே அஹங்கிரஹ ரூபமான தியானம் செய்துகொண்டிருந்தால் போதாதா. பாஹியத்தில் வைத்து ஏன் உபாஸனைசெய்யவேண்டும்? எனின், வேண்டியதில்லை என்று கூறவேண்டியதே. ஆயினும் அதிகாரி தாரதம்மியத்தால் அதுவும் செய்ய வேண்டியிருக்கிறது.

**அஹம்பிரம்மாஸ்மி** என்னும் அனுபவரூப அகண்டாகார விருத்தி ஞானத்திற்கு முக்கிய சாதனமோ தத்துவமஸி என்னும் மஹாவாக்கிய ரூப சப்தத்திற்குச் சுரோத்ரேந்திரியத்தோடு சம்யோக ரூப சிரவணமேயாம். சிரவண மாத்திரத்தினல் ஞானம்வராதபொழுது சாதகனுக்குள்ள பிரதிபந்தங்கள் நீக்கப்படல்வேண்டும். இவை விஷயாஸக்தி, புத்திமாந்தியம், குதர்க்கம், விபர்யயதுர் ஆக்ரஹம் என்னும் வர்த்தமான பிரதிபந்தங்களும், முன் அனுபவித்ததை அடிக்கடி ஸ்மரணை செய்தலாகிய பூத பிரதிபந்தமும், ப்ராரப்த கர்மத்தின் சேஷமும், பலாஸக்தியுடன் செய்த கர்மாக்களின் பலன் இன்னும் அனுபவிக்க வேண்டியிருத்தலும் ஆகிய பவிஷ்யத் பிரதிபந்தங்களும் ஆகும்.

இவற்றுள் பவிஷ்யத் பிரதிபந்தங்கள் அநுபவிக்கப்பட்டுச் செலவு செய்யப்படுவன. அதனல் விதேஹமுக்தி வருதற்குச் சிறிது காலதாமதம் ஏற்படுமே தவிர ஜீவன் முக்திக்குத் தடையில்லை.

பூத பிரதிபந்தமோ, ஸ்மரணைக்குவரும் விஷயத்தின் நாமரூபங்களின் மித்யாத்வ நிச்சயம் செய்து, தத்விஷயாவச்சின்ன சைதன்யத்திற்கும் ஈச்வர சைதன்யத்திற்கும் அபேதமாகச் சிந்தனை செய்ததலால் ஒழியும். இது பாகிய உபாஸனையின் பலமாகிய விக்ஷேப நீக்கத்தாலும் போகும்.

நான் ஜீவன்தான், பிரம்மமல்ல என்ற விபர்யய துராக்ரஹம் நிதித்யாசனத்தால் ஒழியும். இது அஹங்கிரஹ தியானத்தாலும் போகும். இதற்குக் குரு சாஸ்திர உபதேசங்களில் பூர்ண விசுவாசம் உதவி செய்யும்.

குதர்க்கம் மனனத்தால் நீங்கும்.

புத்திமாந்தியமோ லக்ஷயம் என்ன என்பது விளங்காமையாம். இது மஹாவாக்கியத்தைப் பலமுறை சிரவணம் செய்வதால் நீங்கும். அர்த்தானுஸந்தானத்தோடு மந்திரத்தை ஆவிருத்தி செய்வதாலும் இது நீங்கும்.

விஷயாஸக்தியோ ஞானப்பியாசத்திற்குப் பாஹிய சாதனங்களான சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் என்பவைகளை அப்பியஸிப்பதால் போய்விடும். இவற்றுள் முதலாவதான சமம் இந்திரிய நிக்கிரஹம்.

இந்திரியங்கள் அவ்வவற்றின் அர்த்தங்களின் பொருட்டு வெளிச்செல்லும் தன்மையுடையன. அவை பாஹிய வஸ்துவைக் கிரஹித்தல் வஸ்துநிஷ்டமாகும். அதாவது சாதகன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் விஷயத்துடன் இந்திரியத்திற்குச் சம்யோகம் ஏற்பட்டவுடனே அவ்விஷயம் மனத்தால் அறியப்படும். மனம் தியானத்தினின்றும்

சலிக்கும். தியானத்திற்கு அனுகுணமான விஷயங்களில் ஞானேந்திரியங்களைச் செலுத்தினால் மனம் தியானத்திலேயே நிற்கும். இதுதான் பாஹியத்திலுள்ள யந்திரம் முதலானவைகளில் ஆவாஹனம் செய்வதால் ஏற்படும் முதற் பிரயோசனமாம். பாஹிய பூசை ஸ்தோத்திரம் முதலியவைகளை விதிவத்தாக இடைவிடாது செய்வதால் மேற்கூறிய இதர சாதனங்களும் பெறப்படும். ஆகையால் ஆவாஹனம் அவசியமேயாம். இனி ஆவாஹனம் செய்வதன்பொருளும் அதை அறிவதால் ஏற்படும் பயனும் என்ன என்பதை ஆராய்வோம்.

தியானம் செய்யப்படும் ஸ்வரூபம், தியானனுசாரியான அந்தக்கரண பரிணும விசிஷ்டசைதன்யம். இதற்கும் சாக்ஷி சைதன்யத்திற்கும் வேறுபாடில்லை.

திரிகண்டம் என்பது ஸத்வ ரஜஸ் தமோகுணுத்மகமான மாயை. அதன் மத்தியில் உள்ளது சைதன்யம். அதாவது மாயா விசிஷ்ட சைதன்யம். இது ஜகத்தில் உள்ள அஸ்தி பாதி பிரியரூப சைதன்யமாம்.

எந்த வஸ்துவில் ஆவாஹனம் செய்யப்படுகிறதோ அது அந்த வஸ்துவில் பரிச்சின்னமான சைதன்யம்.

மேற்கூறிய மூன்றுவிதமான சைதன்யங்களெல்லாம் ஒரு சைதன்யமே. அது உபாதி பேதத்தினால் வெவ்வேருக வியவஹரிக்கப்பட்டது.

ஆகையால் தன்னிடத்தில் உள்ள சாக்ஷி சைதன்யமும், ஜகத்தில் உள்ள சைதன்யமும், உபாஸ்ய தேவதையில் உள்ள சைதன்யமும் ஒன்றே என்ற பாவனை ஏற்படுகிறது. இது அஹங்கிரஹ பாவனையாம்.

இதனால் பிம்பத்தையோ மேருவையோ உபாஸ்ய தேவதையாகக் கொள்வதில்லை என்பதை அறியவேண்டும்.

ஒருவேளை சாதகன் அவற்றையே தேவதையின் ஸ்வரூபமாக வைத்து உபாஸிப்பானாயின் அதற்கும் பிரதிக உபாஸனையின் பலம் உண்டு. வீண் அல்ல.

மானிட உருவம் உடைய பிம்பத்தில் ஆவாஹனம் செய்வதைவிட மேரு முதலிய சக்கிரங்களில் ஆவாஹனம் செய்வது சிறப்பாகும். அவையும் சித்தமானதாக இருப்பதைவிட அவ்வப்பொழுது வெற்றிலை முதலியபத்திரங்களின்மீது எழுதிப்பூஜிப்பது இன்னும் சிறப்பாகும். ஏனெனில் உபாஸகனுக்குப் பிம்பம் முதலானவைகளில் அவையே தேவதை என்ற புத்தி ஏற்பட்டுவிடக் கூடாது. எதில் வேண்டுமானாலும் ஆவாஹனம் செய்யலாம் என்று கொள்வானேயாயின் தேவதையின் உண்மை ஸ்வரூபம் என்ன என்னும் ஆராய்ச்சியில் மனம் இறங்கும். அதனால் அத்வைத முக்தியாகிய பயன் அடைய வழி ஏற்படுகிறது.

இனி, லலிதையை ஆவாஹனம் செய்வதில் உள்ள சிறப்பான பாவனையை ஆராய்வோம்.

ஸ்ரீ சக்கிரத்தில் திரிகோணத்தின் மத்தியில் உள்ள பிந்துவாகிய பீடத்தில் உள்ள காமேச்வரரின் இடது தொடையில் ஸ்ரீலலிதாமஹாத்ரிபுர சுந்தரி ஆவாஹனம் செய்யப்படுகிறாள்.

| | | |
|---|---|---|
| ஸகல பிரபஞ்சமும் | — | ஸ்ரீ சக்கரம் |
| திரிகுணாத்மகமாயை | — | திரிகோணம் |
| சத்வப் பிரதானமாயை | — | மத்தியபிந்து |
| நிருபாதிக சைதன்யம் | — | காமேச்வரர் |

| | |
|---|---|
| வேதவிஹித நிவ்ருத்தி மார்க்கம் | —இடது தொடை |
| சச்சிதானந்தங்கள் ஸ்வரூப லக்ஷண மாகஉடையவிமர்ச சக்தியே | —லலிதை |

இது த்யேயத்தில் செய்யும் பாவனையாம். இவ்வாறே உபாஸகன் தன்னிடத்திலும் தியானம் செய்யலாம்.

| | |
|---|---|
| தன்தேகமே | — ஸ்ரீ சக்கிரம் |
| அந்தக்கரணம் | — த்ரிகோணம் |
| சுத்தசத்வப்பிரதான மான மனம் | —பிந்து |
| ஈச்வர சாக்ஷியே தன் ஸ்வரூபமாக உடைய அந்தர்யாமி | —காமேச்வரர் |
| அந்தக்கரணத்தின் நிவ்ருத்தி பரத்வம் | —இடது தொடை |
| அந்தக்கரண உபஹித சைதன்யம், (சாக்ஷி) | —லலிதை |

இவ்வாறு பாவனை செய்தால் ஜீவப்பிரம்மைக்ய ரூபமான அகண்டாகார விருத்தி ஏற்படும். ஈண்டு ஜீவப்பிரம்மைக்யம் என்பது தன் ஆத்மா பிரம்மமாக விளங்குதலாம். இப்பொருள் இந்த ஆவாஹனத்திற்கென ஏற்பட்டுள்ள மந்திரத்தால் நன்கு பெறப்படுகிறது. அம்மந்திரத்தில் உள்ள பாலா பீஜங்கள் முறையே சிரவண மனன நிதித்யாஸனங்களைத் தெரிவிக்கின்றன. எஞ்சிய ஹ, ஸ, ர என்ற பீஜங்கள் அவற்றின் பயனைக் குறிக்கின்றன. ஹகாரம் ஜீவசாக்ஷியையும், ஸகாரம் ஈச்வரசாக்ஷியையும், ரகாரம் ஆத்மாவே பிரம்மமாக விளங்குதலாகிய அபிவ்யஞ்சகத்தையும் குறிக்கின்றன.

**உபசாரங்கள்**

இப்பிரபஞ்சம் முழுமையும் மாயா விசிஷ்ட காரணேச்வரனின் ஸ்தூலதேகமாகும். கரசரணுதி அவயவங்களோடு கூடி உபாஸ்ய தேவதையாக இருப்பது அக்காரணேச்வரனே. ஆகையால் உபசாரப் பொருள்களெல்லாம் அவ் ஈச்வரனின் ஸ்தூல தேகத்தின் பகுதிகளாம். அவனுடைய தேகப் பகுதிகளை அவனுக்கே உபசாரமாக அளித்தல் எவ்வாறு பொருந்தும்? எனின் அவற்றிற்கு உபசாரப் பொருள்களாகும் தன்மை நம்மால் கற்பிக்கப் படுதலே. ஆகையால் ஒவ்வொரு உபசாரத்தையும் **கல்பயாமி** என்னும் சொல்லால் முடிக்கிருேம்.

உபாஸ்ய தேவதையினிடத்தில் பரோக்ஷத்வ பிராந்தி உள்ளவர்கள் அதைப் பரிச்சின்னமாகக் கொண்டு, அதைத் திருப்தி செய்து அதன் அருள் பெறவேண்டும் என்ற எண்ணமுடையவராய் உபசாரப் பொருள்களை அதனுக்குச் சமர்ப்பிக்கின்றனர். ஆகையால் அவர்கள் ஒவ்வொரு உபசாரத்தையும் **சமர்ப்பயாமி** என்னும் சொல்லால் முடிப்பார்கள். அவர்கள் பக்தி மேலிட்டால் அவ்வாறு செய்கின்றனர் என்று கொள்ளலும் தகும்.

**லயாங்க பூஜை**

அர்த்த சிருஷ்டி போலவே சப்தமும் பிரம்மத்தினிடத்தில் சிருஷ்டிக்கப்பட்டதே. அதாவது சப்தம் சித்விவர்த்தமும் மாயா பரிணுமமும் ஆகும். சப்தம் நித்யம் என்று சாக்த கிரந்தங்கள் கூறுவது அர்த்த வாதமாகும். பிரளயம் வரையில் அர்த்த சிருஷ்டி உள்ளது போல் சப்தமும் உண்டு. பொருள்கள் அழிந்த பிறகும் அவற்றைக் குறிக்கும் சப்தம்

இருப்பதால் சாபேக்ஷிக நித்யத்வம் அதற்குக் கூறப் பட்டது. ஆயினும் அது பிரம்மத்தைப் போல் நித்யமானது அல்ல. சப்தப் பிரம்மம் என்று சப்தத்தைப் பிரம்மமாகக் கூறுகின்றனரே, எனின் இவ்வெல்லாம் பிரம்மம் என்று சுருதி கூறுவதற்கு, பிரபஞ்சத்தையே பிரம்மமாகக் கொள்ளாது, அது பிரம்மத்தில் அத்யஸ்தம், உண்மையில் இருப்பது பிரம்மமே, பிரபஞ்சம் தோன்றுவது ஜீவனது அஞ்ஞானத்தினுல் தான், ஆகையால் இவ்வெல்லாம் பிரம்மம் என்று சுருதி பிரபஞ்சத்தை நோக்கிக் கூறுவது சரி என்று பொருள் கொள்ளப்படுகிறது. அதுபோல், சப்தம் பிரம்மத்தில் கற்பனை. ஆகையால் அதன் அதிஷ்டானம் பிரம்மம். கற்பித வஸ்துவின் உண்மை ஸ்வரூபம் ஆராய அது அதிஷ்டானமாய் முடியும். ஆகையால் சப்தம் பிரம்மம் என்று வியவஹரிக்கப்படுகிறது. ஆயினும் சப்தத்திற்கு அர்த்தத்தைவிட அதிக கௌரவம் உண்டு. அர்த்தம் ஜீவனை லௌகிக ப்ரவ்ருத்தியில் இழுக்கும். சப்தமோ ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிய இரண்டிலும் இழுக்கும். நிவ்ருத்திபரமாகவும் சப்தமும் இருப்பதால் அது அர்த்தத்திலும் சிறந்ததே.

சப்தம் வாசகம் அர்த்தம் வாச்யம் வாச்ய வாசகங்களுக்கு அபேதம் உண்டு. வாசகம் இல்லாது வாச்யத்தை மனத்தால் அறிய முடியாது. ஆகையால் சப்தம் இல்லாது அர்த்தம் இல்லை. இதனுல் தான் சப்தம் முதலில் சிருஷ்டிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டது. மேலும் சப்தத்தினின்றும் அர்த்தம் சிருஷ்டிக்கப்பட்டது என்பதும் இதனுலே தான்.

சப்தத்திற்கும் பிரம்மத்திற்கும் வாச்ய வாசக சம்பந்தம் இருப்பதாகக் கூறி, அவ்விரண்டுக்கும் உள்ள அபேதத்தினுல் சப்தமே பிரம்மம் எனின், அது பொருந்தாது. சப்தம் நேராகப் பிரம்மத்தைத் தெரிவிக்காது. இது அல்ல, இது அல்ல என்ற அதத்யாவிருத்தியினுல்தான் தெரிவிக்கும். ஆதலால் சப்தம் பிரம்மத்திற்கு வாசகம் அல்ல.

பிரம்மம் சிரவணம் செய்யத் தகுந்தது, மன்னம் செய்யத் தகுந்தது, நிதித்யாஸனம் செய்யத் தகுந்தது என்று சுருதி கூறி இருக்கின்றதே எனின், அதன் எட்டாத் தன்மையின் காரணமாக ஜீவனுக்கு மோக்ஷத்தில் பிரவிருத்தி இல்லாமற் போய் விடுமே என்ற கருணையினுல் வேதமாதாவினுல் அவ்வாறு கூறப்பட்டதாகும்.

"மனமும் வாக்கும் அதனிடம் செல்லாது" என்று கூறியிருக்கின்றதே எனின், சுத்தப் பிரம்மம் மலின சத்துவப் பிரதானமான மனத்தினுல் அறிய முடியாதது. லெளகிக வாக்குக்களால் அறிய முடியாதது. ஆனுல் சுத்த சத்துவப் பிரதானமான மனத்தினுல் வைதிக வாக்குகளால் அதுவும் லக்ஷணையால் அறியக் கூடியது என்பதாம்.

இத்தகைய சப்தமே மந்த்ரம். இந்த மந்த்ரம் உபாஸ்ய தேவதையின் சூக்ஷ்ம சரீரமாகும். மேலே கூறியவாறு தேவதைக்குக் கற்பிக்கப்பட்ட சரீரத்திற்கு வாசகம் ஆகையால் அவ்வாறு கொள்ளப் படுகிறது. நிர் அவயவியான பிரம்மத்திற்கு தியானத்தின் பொருட்டு அவயவம் கற்பிக்கப்பட்டது. ஆதலால் மந்திரத்தின் ஆறு அங்கங்களும் தேவ

தையின் ஹ்ருதயாதி ஆறு அங்கங்களும் வாச்ய வாசக சம்பந்தத்தால் அபேதமாகும்.

இந்த ஷடங்க அர்ச்சனை செய்யும்போது மேற் கூறிய அபேத பாவனையும், ஷடங்க ரூபமான பந்த்ர மும் ஷடங்கரூபமான உருவமும் கற்பனையே என்ற பாவனையும் செய்ய, எஞ்சிய சைதன்யம்தான் சத்தியம் என்றும், மஹா வாக்கிய துல்யமான மூல மந்த்ர அர்ச்சனையால் அந்தச் சைதன்யமே தனது ஆத்மா வென்றும் ஏற்படும்.

**நித்யா யஜனம்**

காலமும் பிரம்மத்தினிடத்தில் அத்யஸ்தமாகத் தோன்றியதாகும். அது தோன்றியது என்று கூறுவதும் உபசாரமே. அது மாயை போல் அனாதி யாகும்; அதாவது ஆதியில்லாதது; அதற்குப் பிறப்புக் கூறின் அது பிறந்த பொழுது மற்றொரு காலம் இருந்ததாக ஒப்புக்கொள்ள வேண்டிவரும். இந்தக் காலத்தைப் போல் அந்தக் காலத்திற்கும் முன் மற்றோர் காலம் ஒப்புக்கொள்ளவேண்டி வரும். இது அநவஸ்தா தோஷமாகும். ஆக, காலம் அநாதியாய்ப் பிரம்மத்தினிடத்தில் இருப்பதுபோல் காணப்படுகிறது என்று ஏற்படுகிறது.

சூரியோதயத்தைக் கொண்டு நாளும் அதன் பகுதிகளும், வாரம், பக்ஷம், மாதம் முதலியவை களும் ஆகக் காலத்தைப் பிரித்து வியவஹரிக் கிறோம். அதுபோலவே சந்திரனின் கலைகளின் வளர்வு தேய்வுகளைக்கொண்டு திதிகளாகக் காலத் தைப் பிரித்து வியவஹரிக்கிறோம்.

சந்திரன் எல்லாக் கலைகளும் நிறைந்து தோன் றும்பொழுது அதனைப் பூர்ண சந்திரன் என்கிறோம்.

அதில் 16 கலைகள் உண்டு. ஒவ்வொரு கலையாகக் குறைந்துவரும் காலத்தை ஒரு திதி என்கிறோம். ஒவ்வொரு திதிக்கு ஒவ்வொரு கலைவிதம் 15 கலைகள் குறைந்தபொழுது சந்திரன் முற்றும் காணமற் போய்விடினும் மறு திதி முதல் கலைகள் வளர்வதைக் காண்பதால் அவை வளர்வதற்குப் பீஜ ரூபமாகச் சந்திரனிடத்தில் அவ்யக்தமானகலை ஒன்று மிஞ்சி இருந்ததாக ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது. அது 16வது கலை.

திதி ரூபமான காலாவச்சின்ன சைதன்யம் நித்யையாகும். காலத்திற்கு அதிஷ்டானமான ஸ்வரூபசித்தோ **லலிதா மஹாநித்யை**யாகும். இது காமகாமேச்வரர்களின் ஸாமரஸ்யரூபமாகும். இதற்குப் பதினைந்தும் ஒன்றுமாகப் பதினாறு கலைகள் உண்டு. முதற் பதினைந்து கலைகள் **நித்யைகளாம்.** பதினாறுவது கலை **மஹா நித்யையாகும்.** உண்மையில் முதற் பதினைந்து கலைகள் அத்யஸ்தமாம். அவற்றின் சாபேக்ஷிகமாக இதன் ஸ்வரூபசித்தை பதினாறுவது கலையாக வியவஹரிக்கிறோம். இவ்வுண்மைகள் பின்வரும் ஆராய்ச்சியால் அறியப்படும்.

அமாவாஸ்யைக்கும் சுக்ல பக்ஷப்ரதமைக்கும் காமேச்வரி என்ற பெயருடைய ஒரே நித்யைதான். சுக்ல பக்ஷத்விதீயைக்கும் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசிக்கும் பகமாலினி என்ற ஒரே நித்யைதான். இவ்வாறு பதினைந்து நித்யைகளையும் கொள்ள வேண்டும்.

ஆகையால் இவற்றினிடத்தில் திதிநித்யாத்தன்மை இருத்தலாகப் பாவித்தல் கற்பனையே,

என்றும், ஆகையால் காலம் அத்யாசம் என்றும் இவற்றிற்கும் மஹா நித்யைக்கும் ஸ்வரூபத்தால் அபேதமே என்றும், லலிதா மஹாத்ரிபுர சுந்தரியாகும் இந்த மஹாநித்யை காலாதிதம் என்றும் ஏற்படுகிறது.

மேற்கூறிய அபேதத்தைத் திருடப்படுத்துதல் பொருட்டு முதலில் பிந்துவில் செய்த அன்றைய நித்யா யஜனத்திற்கு முன்னும் பின்னும், எல்லா நித்யைகளின் யஜனத்திற்குப் பின்னும் பிந்துவில் மஹாநித்யையின் யஜனம் விதிக்கப்பட்டுள்ளது.

இந்த நித்யைகளைத் திரிகோண ரேகையில் பாவித்தலால் இவற்றிற்கும் திரிகுணாத்மகமான மாயாவிசிஷ்டசேதனத்திற்கும் வேறுபாடு இல்லை என்பது அறியத்தக்கது. காலம் என்று ஒன்று தோன்றுவதும் மாயையின் விலாசமே. ஆக, இந்த நித்யாயஜனத்தால் ஆத்மாபின்ன சித்சக்தி காலாதிதஸ்வரூபமானது என்பது பெறப்பட்டது.

**குரு மண்டல பூஜை**

காரணேச்வரன் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து அதனுள் பிரவேசித்தனர்; தானே ஜீவனாக விளங்குகிறார் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. கடவுள் இவ்வாறு ஏன் செய்தார் என்றோ, தனக்கு ஜீவத்வம் ஏன் வந்தது என்றோ எந்த ஜீவனும் ஆராயவேண்டியதில்லை.

வியாதிஸ்தன் தனக்கு ஏன் வியாதி வந்தது என்று ஆராய்வது வீணேயாம், தன் வியாதிக்கு மருந்து கொடுக்கும் வைத்தியரைத் தேடிச் சென்று அவர் கொடுக்கும் மருந்தை அவர் சொன்ன முறையில் சாப்பிட்டால் வியாதி நீங்கும்.

இவ்வாறே ஜீவன் தனக்குள்ள ஜீவத்தன்மையைப் போக்கிக்கொள்ள ஸத்குருவை நாடிச் செல்ல வேண்டும். குரு உபதேசித்த ஞானத்தை அப்பியசித்து ஜீவ பாவத்தைப் போக்கிக்கொண்டு ஜீவன் முக்தனாய் விளங்கவேண்டும்.

மருந்து உண்ணும் காலத்து அதற்கு அநுகுணமான உணவு முதலியவற்றை விதிக்கவும், வியாதியின் தன்மைக்கு ஏற்ப மருந்தை மாற்றவும் வைத்தியர் அருகில் இருக்கவேண்டியிருக்கிறது. இதுபோலவே ஞானப்பியாசம் செய்யும் ஒவ்வொருவரும் குருவின் சன்னிதியில் இருக்கவேண்டும். அல்லது அவரை அடிக்கடி சென்று தரிசிக்க வேண்டும்.

குருவும், பிரம்ம ஞானியாயும், பிறருக்கு எடுத்து உரைக்கும் ஆற்றல்உள்ளவராயும் இருக்கவேண்டும் ஞான சாத்திரங்களை ஒருவன் தானே கற்றுத் தெளிதல் முடியாது. ஞானப்பியாசத்தின்பொருட்டு ஒவ்வொருவருக்கும் குரு இருக்கவேண்டும். ஆகையால் நம் குருவுக்கும் ஓர் குரு இருந்திருக்கவேண்டும். அவர் தம்குருவிடம் ஞானோபதேசம் பெற்றிருக்க வேண்டும். நம் குருவை **ஸ்வகுரு** வென்றும், அவரது குருவை நமக்குப் **பரம குரு**வென்றும் வியவஹாரம் செய்தல் சம்பிரதாயமாகும். பரம குருவின் குருவைப் **பரமேஷ்டிகுரு** வென்போம். இப்படிப் பரம்பரையில் வந்தவர்களே ஞானோபதேசம் சரியாகச் செய்வர்.

வைத்திய சாஸ்திரத்தைத் தானே கற்றுத் தெளிதலும், அந்த அறிவைக்கொண்டு பிறருக்கு வைத்தியம் செய்தலும் எவ்வாறு இயலாதோ

அவ்வாறே தான் குருவினிடத்தில் ஞானம் பெருத ஒருவன் தான் பயன் அடையாமையே யன்றிப் பிறருக்கும் ஞானோபதேசம் செய்யத் தகுதியுடைய வன் அல்லன்.

ஆகையால் நம் குரு ஒரு குருபரம்பரையில் வந்தவ ராக இருத்தல் வேண்டும். அவர் செய்யும் ஞானோப தேசத்தில் நமக்கு நம்பிக்கை வர நமது குரு பரம்பரை யின் ஞானம் நமக்கு அத்யாவசியமாகும். குருவாக்கி யத்தில் நம்பிக்கை வைத்தல் என்பது அவரால் உபதேசிக்கப்பட்ட ஞானம் நமக்கு மோக்ஷரூபமான பயன் தரும் என்ற திர்மானமேயாகும். இந்த நம்பிக்கைக்குக் குரு பரம்பரா ஞானம் சிறந்த காரண மாகும். பூர்ண விசுவாசம் இன்றி ஞானத்தை அப்பியசித்தல் அஸ்திவாரம் இன்றிக் கட்டடம் கட்டுவது போன்றதாகும். இதனுல் குரு ஒரு பரம் பரையில் வந்தவராக இருக்கவேண்டும் என்றும், குரு பரம்பரா ஞானம் அவசியம் என்றும் நிரூபிக்கப் பட்டது.

குரு பரம்பரையில் முதலில் மஹாதேவரும், மத்தியில் சங்கர பகவத்பாதரும், கடைசியில் ஸ்வ குருவும் குறிக்கப்பட்டுள்ளனர்.

ஈச்வரன் ஜீவர்களை உய்வித்தற் பொருட்டுத் தானே குருவாக நின்று தன்னினும் வேறு அல்லாத தன் ஸ்வரூப சித் சக்திக்கு ஞானோபதேசம் செய்தார். இரண்டற்ற நிலையையுடைய அவரது இக்காரியம் ஸ்வரூப விமர்சனமேயாகும். அவரால் உபதேசிக்கப் பட்டவை **ஆகமங்கள்** எனப்படும். சிலசமயங்களில் சித்சக்தி தனக்கு அபின்னமான ஈச்வரனுக்கு உபதேசம் செய்தது. அதனுல் உபதேசிக்கப்

பட்டதை **நிகமம்** என்பர். அவ்விருவரின் ஸ்வரூபமும் ஒன்றே. இந்த ஈச்வரரே மஹாதேவர் எனப்பட்டார். இவரே சரியாநந்த நாதராவர். இவருக்குத் தன் ஸ்வரூபத்தில் ஆவரணம் இல்லை. ஆகையால் இவருக்கு ஒரு குரு வேண்டப்படவில்லை.

இவர், ஞானனந்த ஸ்வரூபமானவர். இவருடைய இருசரணங்கள் பிரகாச விமர்சங்களாம். அவற்றைச் சுக்ல ரக்த சரணங்கள் என்றும் கூறுவர். அவற்றினின்றுதான் வேதங்களும் சகல சாஸ்திரங்களும் பிறந்தன. அவையே எல்லா மந்த்ரங்களுக்கும் பிறப்பிடம். அச்சரணங்கள் ஒன்றற்கு ஒன்று அபேதமாம். அவற்றைக் குறிக்கும் மந்த்ரங்களால் மேல் குறித்த உண்மைகள் நன்கு விளங்குகின்றன.

ஆருவது ஆம்நாயத்தின் கடைசியில் இம் மந்திரங்கள் தரப்பட்டுள்ளன. இவ்விரண்டு மந்திரங்களும் ஒன்றே என்பது அவற்றின் பீஜாக்ஷரங்களை நோக்க விளங்கும். ஆகையால் அவற்ருல் குறிக்கப்பட்ட பிரகாச விமர்சங்களுக்கு அபேதமாம். அவற்றில் பாலை, பஞ்சதசி, ஹாதிவித்யை, துரீய வித்யை, பராஷோடசியின் முதல் மூன்று பீஜங்கள், மஹா ஷோடசியின் முதல் மூன்று கடைசி மூன்று பீஜங்கள், அநுலோம விலோமமாகத் திரிதாரி ஆகியவற்றைக் காணலாம். பூர்வாம்நாயத்திற்கு முக்கிய மந்த்ரம் பாலை, தக்ஷிணம் நாயத்திற்குப் பஞ்சதசி; பச்சிமாம்நாயத் திற்குலோபா முத்ரா வித்யை, உத்தராம்நாயத்திற்குத் துரீய வித்யை, ஊர்த்வாம்நாயத்திற்குப் பராஷோடசி. இவை முறையே அந்தந்த ஆம்நாயங்களில் முதலில் இருக்கின்றன. மேலும் அந்தந்த ஆம்நாயத்திலுள்ள இதர மந்த்

ரங்களால் குறிக்கப்பட்ட தேவதைகள் அந்தந்த முதல் மந்த்ரத்தால் குறிக்கப்பட்ட தேவதையின் மயூகம் என்றும், அந்தந்த ஆம்நாய குருமண்டலங்களுக்கும் அந்த தேவதை களுக்கும் அந்தந்த ஆம்நாய சமய வித்யேச்வரிக்கும் முடிவில் மூலவித்யையால் குறிக்கப்பட்ட சித்சக்திக்கும் அபேதமாம். இவ்வாறே மந்த்ரராஜமாகும் மஹா ஷோடசியைப் பற்றியும் அறிய வேண்டும். த்ரிதாரி எல்லா ஆம்நாயங்களுக்கும் பொதுவாகும். மஹாஷோடசியைக் குறிக்கும் அதன் முதல் மூன்று பீஜங்களும் த்ரிதாரியும் விலோமமாவுகம் கூறப்பட்டிருப்பதால் மந்த்ரங்களை விமர்சிக்கவும் வேண்டும் என்பது சூசிக்கப்படுகிறது.

சத்தாமாத்திர பிரம்மமே ஸ்பூர்த்தியாகிறது. இந்த ஸ்பூர்த்தியே பிரகாச விமர்சங்களாகப் பிரிகிறது. இவற்றின் ஸாமரஸ்யமே பரா காமகலையாம். மாயா விசிஷ்டகாரணேச்வரனே அபரா காம கலையாம். பர அபர காம கலைகளுக்கு ஸ்வரூபத்தில் பேதமில்லை. அபரா காமகலையில் பிரகாச விமர்சங்கள் சுக்ல ரக்த பிந்துக்களாக வியவஹரிக்கப்படுகின்றன.

பிரகாச விமர்ச ஸாமரஸ்யமேஸ்வரூபமாகவுள்ள சரியானந்த நாதருக்கு அபின்னமாய் விளங்குபவர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாவர். அவருக்குப் பின் த்ரிகோணத்தின் மூன்று ரேகைகளில் குருபரம்பரையினர் கூறப்பட்டனர். இவர்கள் யாவரும் காரணேஸ்வரனின் வேறு அல்லர். அவர்களுக்குப்பின் இவ்வுலகத்தில் முன் அவதரித்துக் குரு பரம்பரையில் இருந்தவர்கள் திவ்ய சித்த மானவ ஓகங்களாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளனர். இவர்கள்

மானிடவேடங் கொண்டவர் ஆதலால் த்ரிகோணத்தின் வெளியில் குறிக்கப்பட்டனர், இவர்களுக்குப் பின் ஆதி சங்கரபகவத்பாதரும், அவருக்குப்பின் (தனது பரம்பரையில்) ஸ்வகுரு வரையில் உள்ளவரும் நம்மை உய்விக்க அவதரித்தவரும் ஆகிய குரு பரம்பரையினராகக் குறிக்கப்பட்டனர். இவர்களுக்கும், திவ்ய சித்த மான வௌகங்களுக்கும், த்ரிகோண ரேகையில் அர்ச்சிக்கப்படுபவர்களுக்கும், தக்ஷிணாமூர்த்திக்கும் சரியானந்த நாதருக்கும் சிறிதளவும் பேதமில்லை.

இவ்வாறு அறிவதால் உண்டாகும் பயன்கள் பின்வருவனவாம். (1) முற்கூறியவாறு நமக்கு நம் குரு உபதேசித்த ஞானம் பரம்பாரக்தமானது. ஆகையால் இது ஈச்வரன் ஜீவர்கள் உய்தற்பொருட்டு உபதேசித்ததே; இதனைக்கொண்டு நாமும் உய்யலாம் என்ற பூர்ணமான நம்பிக்கை ஏற்படுகிறது. (2) நமது குருவுக்கும் ஈசனுக்கும் சிறிதளவும் பேதமில்லை; ஈசனே நம்மை உய்விக்க இந்த உருவம்கொண்டு வந்துள்ளார் என்று குருவினிடத்தில் ஈச்வரபுத்தி உண்டாகும். இந்த நோக்கோடு குருவை வணங்குதலால் ஈச்வரோபாசனையின் பலமான மல விசேஷபங்களின் நீக்கம் ஏற்படுகின்றது. கண்ணுக்குத் தெரியாத ஈச்வரனை உபாஸித்தலினும் எதிரில் அவர் ஸ்வரூபமாகவே உள்ள குருவை உபாஸித்தலால் நிச்சயமாக அதிகப்பயன் உண்டு. இதனால் குரு பரம்பரா ஞானத்தின் அவசியத்தன்மை பெறப்பட்டது. இக் குரு பரம்பரா ஞானம் குரு பாதுகாமந்த்ரத்தால் அடையப்படுவதாகும்.

குருவின் ஸ்வரூபம் பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்யமாகும். அவரது சரணங்கள் அப் பிரகாச விமர்சங்களைக் குறிப்பதாகக்கொள்வது சம்பிரதாய மாகும்.

ஈச்வரோபாசனையைவிடக்குருவை உபாஸித்தல் சிறப்பாகும். அவருடைய கரசரணுதி அவயவங் களோடுகூடிய பூதஉடலைத் தியானிப்பதைக் காட்டி லும் அவரது இரு சரணங்களை மாத்திரம் தியானித் தல் சிறப்பாகும். அச்சரணங்களைச் சுக்ல ரக்த பிந் துக்களாகத் தியானிக்கலாம். அவற்றிலும் சிறப் பாகப் பிரகாச விமர்சங்களாகத் தியானிக்கலாம். அச்சரணங்களைத் 'தன்னுடைய ஸஹஸ்ராரத்தில் இருப்பதாகப்பாவிக்கலாம். அவற்றின் ஸாமரஸ்ய ஸ்வரூபத்தைத் தன் ஆத்மாவிற்கு அபின்னமாகத் தியானித்தல் மிகச் சிறப்பாகும். இதுவே ஜீவப் பிரம்மைக்கிய ரூபமான அகண்ட ஞானம் தருவ தாகும்.

இக்குருமண்டல தேவதைகளின் மந்திரங்களை ஆராய்வதால் ஓர் உண்மை வெளிப்படுகின்றது, குரு பரம்பரையில் உள்ள ஒவ்வொரு குருவிற்கும் ஒரு நாமம் உண்டு. அந்த ஒவ்வொரு நாமாவும் பிரம்மத்தின் ஸ்வரூப லக்ஷணமாக அமைந் திருப்பதை அறிதல் வேண்டும். அவைபோலவே தீக்ஷை பெற்றவனின் தீக்ஷா நாமமும் இருத்தல் காணலாம். இவ்வாற்ருல் சரியானந்தநாதர் முதல் நம் குரு வரையில் உள்ள ஒவ்வொருவருடைய ஸ்வரூபமும் பிரம்மமே. சாதகனுடைய ஸ்வரூபமும் பிரம்மமே. ஆகையால் பாரமார்த்திகத்தில் சாதகனுக்கும் குருவுக்கும் ஈச்வரனுன தேவதைக்கும் அபேதமே, என்ற உண்மை அறியப்படுகின்றது.

ஆவரண பூஜை

சகல பிரபஞ்சமும் புத்தி விருத்திக்கு விஷயமாகும். ஆனல் அது கண்ட கண்டமாக அறியப்படுகிறது. பிரவிருத்திபரமான அம்மனத்திற்கு அப் பிரபஞ்சப்பகுதிகள் நாம ரூபங்கள் மாத்திரம் உடையவையாய் விளங்குவதால் அவை அனுகூலமாகவோ பிரதிகூலமாகவோ அறியப்படுகின்றன. அவ்வாறு அவை பந்தத்திற்கு ஏதுவாகின்றன. சத்துவம் மிகுந்துள்ள மனத்திற்கோ அவை ஒவ்வொன்றும் முற்றிலும் நிறைந்த பிரகாச மாத்திரமான சிறந்த தொன்றற்கு விளங்கும் ஸ்தானமாகக் காணப்படும். புத்தி விருத்திக்கு விஷயமாகும் இப்பகுதிகளை ஆவரணம் என்பர். அவை ஒன்பதாக ஸ்ரீ சக்ரத்தில் கொள்ளப்பட்டுள்ளன. ஒன்பதும் ஒன்பது சக்ரமாக வியவஹரிக்கப்படுகின்றன.

ஒவ்வொரு சக்ரத்திலும் ஒரு சக்ரேச்வரியும், அதன் கிரணங்களாகப் பல யோகினிகளும், ஒரு முத்ரா தேவதையும், ஒரு ஸித்தி தேவதையும் பாவிக்கப்படுகின்றன.

ஸர்வ பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டாத்ரி ஞானநந்த ஸ்வரூபிணியாகும் சித்சக்தியாகும். இதற்கும் சக்ரேச்வரிக்கும் யோகினிகளுக்கும் ஸித்திமுத்ரா தேவதைகளுக்கும் பாமார்த்திக ஸ்வரூபத்தில் சிறிதளவும் பேதமில்லை. இவ்பாவனையோடு ஆவரண பூஜை செய்யவேண்டும்.

யோகினிகள் சக்ரேச்வரியின் கிரணங்களாதலால் அவற்றிற்கும் சக்ரேச்வரிக்கும் பேதமில்லையென்றும், அச்சக்ரேச்வரியே ஸித்திமுத்ரா தேவதைகளாக விளங்குகின்றதென்றும், அச் சக்ரேச்

வரிக்கும் லலிதா மஹாத்ரிபுர சுந்தரிக்கும் சிறிதள வும் பேதமில்லை என்றும், பஞ்ச பூதாத்மகமான இப் பிரபஞ்சமெல்லாம் சித்சக்தியே என்றும், அது த்ரி புடியை விளக்குகின்ற தன் சாக்ஷிவடிவ தன் ஆத்மா வாகும் என்றும் ஒவ்வொரு ஆவரண பூஜைசெய் யும் பொழுதும் சாதகன் முறையாகப் பாவனை செய் தல் வேண்டும்.

பஞ்சபஞ்சிகை தேவதைகளையும் இவ்வாறே அபேத பாவனையுடன் பூஜை செய்யவேண்டும்.

**ஷட்தர்சன பூஜை**

பக்தன் தன் உபாஸ்ய தேவதையை நோக்கி "எல்லா மதங்களும் நீயே ஆனாய்" என்று கூறுதல் யாண்டும் காணலாம். ஆகையால் அந்த அந்த மதங்களில் எது எது தெய்வமாகப் பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்றதோ அதுவெல்லாம் நமது உபாஸ்ய தேவதையாகும் என்று கொள்ளப்படுகிறது. அவ் வாறு கொள்வதால் அம்மதங்களைப் பின்பற்ற வேண்டும் என்று அல்ல. பிற மதங்களைத் தூற்று தல் கூடாது என்னும் சமரச நோக்கை வளர்க்கவே யாகும். இல்லையேல் மனத்தில் பேத எண்ணங்கள் வளர்ந்து, அது ரஜோகுணம் நிறையப்பெற்று, விக்ஷேபம் வளரும். மனச்சாந்தி இல்லாமற்போகும். சாக்தர்களாகிய நாம் ஸ்வானுபூதிக்கு முயல வேண்டுமே ஒழிய, பிற மதத்தினருடன் வாதம் செய்யவேண்டியதில்லை. இக்கொள்கையை வலி யுறுத்தவே ஷட்தர்சன வித்யார்ச்சனம் விதிக்கப் பட்டது.

**ஷடாதார பூஜை**

நம்முடைய தேகத்துள் இருப்பதாகப் பாவிக்கப்

படும் மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களும் புத்தி விருத்திகளே யாகும். அந்தந்த ஆதாரத்தில் இருப்பதாகக் கூறப்பட்ட கணபதி முதலிய ஒவ்வொரு தேவதையும் அந்தந்த விருத்தி விசிஷ்ட சைதன்யமாகும். இவை எல்லாவற்றிற்கும் அதிஷ்டான ஸ்வரூபமாய் இருப்பது சாக்ஷி சைதன்யமே. ஆகவே மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் உள்ள தெய்வங்களுக்கும் தன் ஆத்மாவிற்கும் அபேதமே ஸித்திக்கின்றது. இப்பாவனையுடனே இப்பூஜை செய்தல் வேண்டும்.

**குலதீபம்**

குண்டலினி சக்தி ஷடாதாரங்கள் வழியாகச் சென்று பிரம்மரந்திரத்தில் உள்ள பரசிவத்துடன் ஒன்றுவதாகப் பாவனை செய்யப்படுகிறது. இது செல்லும் மார்க்கத்திற்குக் குலமார்க்கம் என்று பெயர். இது பாவனையே யாகையால் குலம் என்பது அந்தக் கரணமேயாகும்.

இந்த அந்தக் கரணத்தின் விருத்திகள் மூன்று வகைப்படும். அவை துவைதவிருத்தி சாக்ஷி விருத்தி அகண்டாகாரவிருத்தி என்பனவாம்.

இது குடம் என்பதில் அந்தக்கரண விருத்தி இந்திரிய வாயிலாக வெளிச்சென்று குடத்தின் ஆகாரம் அடைகிறது. அப்பொழுது குடத்தை ஆவரித்துள்ள தூலாஞ்ஞானத்தை அந்தக்கரண விருத்தி நாசஞ் செய்யும். விருத்தி யவச்சின் சேதனமும் கடாவசின்ன சேதனமும் ஒன்றாகும். பஞ்சபூத காரியமாகிய கடம் ஜடமாகையால் அது தானாக விளங்காது. அதனை அந்தக்கரண பிரதி பிம்பித சைதன்யம் அதாவது சிதாபாஸன்

பிரகாசிப்பிக்கச் செய்யும். இதுவே நாம் உலகப் பொருள்களை இந்திரிய வாயிலாக அறிதலாம். இது துவைத விருத்தியாகும்.

"நான் குடத்தைப் பார்க்கிறேன்" என்ற த்ரிபுடி ஞானம் நமக்கு உண்டாகிறது. இதில் நான் என்பது பிரமாதாவாகும், அதாவது அந்தக்கரண விசிஷ்ட சைதன்யமாகும். குடம் என்பது பிரமேயம். பார்க்கிறேன் என்பது ப்ரமாணம். இம்மூன்றையும் ஒரே காலத்தில் சிதாபாஸனால் விளக்க முடியாது. இம் மூன்றிலும் அதிஷ்டானமாய் இருக்கும் சாக்ஷியே இந்தத் திரிபுடியைப் பிரகாசிக்கச் செய்யும். இது சாக்ஷிவிருத்தியாகும். கயிற்றில் பாம்பு தோன்றுதல், கனவு முதலிய அவித்யா விருத்திகளையும், பயம், சம்சயம், மனோராஜ்யம் முதலிய மனோ விருத்திகளையும் விளங்கச் செய்வது இந்தச் சாக்ஷியே.

"நான் பிரம்மமாக இருக்கிறேன்," என்று சொரூபத்தையே விஷயம் செய்யும் விருத்ியானது பாவனுதார்ட்டியத்தால் அகண்டமாக ஆனபொழுது அதற்கு **அகண்டகார விருத்தி** என்று பெயர். இதில் பிரத்யக் அபின்ன பிரம்மம் உண்மையில் விருத்திக்கு விஷயமாகாதது; ஆயினும், சுத்தசத்துவப் பிரதான அந்த அகண்டாகார விருத்தியினுல் பிரத்யகாத்மாவை மறைக்கும் **மூலாஞ்ஞானம்** ஒழிக்கப்படும். சுவயம் பிரகாசமான பிரத்யகாத்மாதானுகவே விளங்கும். இதுவே **முக்தி** நிலையாகும்.

மேற்கூறிய பிரத்யகாத்மாவே சாக்ஷி சைதன்யமாகும். இது அஸங்கமானது. இதனுடைய பிரதிபிம்பம் அல்லது ஆபாஸமே சிதாபாஸன் எனப்படுவது. இந்தச் சிதாபாஸன் உண்மையில் அந்தக்

கரண உபஹித சைதன்யமே. அதுவே சாக்ஷியாகும். அதுவே பிரத்யகாத்மா. அதுதான் அந்தஸ்தேஜஸாகும். அது உள்ளே இருந்து தன்னை விளக்கப் பிற தேஜசுகளை வேண்டாது தானே விளங்குவதாகும்.

பிரபஞ்சத்திலும், ஈச்வரனிலும் உள்ள தேஜோரூபமான சைதன்யமோ முதலில் பரோக்ஷமாக அறியப்படுகிறது. ஜீவப்பிரம்மைக்கியரூப அகண்டாகார விருத்தி ஞானத்தால் அதுவே பிரத்யகாத்மாவாக அபரோக்ஷமாகிறது. இந்த பாவனையே குலதீபத்தால் அறியப்படுகிறது.

இதில் இரண்டை ஒன்று ஆக்குவதென்பது இல்லை என்பதும், ஐக்கிய பாவனை மாத்திரம் போதாது என்பதும், தத்துவம் பதார்த்தங்களின் ஞானம் கொண்டுதான் இது அடையப்படும் என்பதும், குலதீபமாக விசேஷார்க்கியத்தை ஜ்வலிக்கச் செய்வதால் பெறப்படுவதாகும்.

**காமகலா தியானம்**

நிர்குணமானதும் சச்சிதானந்தமே லக்ஷணமாக உடையதுமான பிரம்மம் தியேயம் ஆதற்பொருட்டு அதற்குக் கரசரணாதி அவயங்களோடு கூடிய உருவங்கள் பெரியோர்களாலும் சாஸ்திரங்களாலும் கற்பிக்கப்பட்டன. அவற்றைக் குறிக்கும் தியானங்களும் மந்த்ரங்களும் ஏற்பட்டுள்ளன. அவ்வுருவங்களுள் தாயின் வடிவமான ஸ்திரீயுருவமும் பிரம்மத்திற்குக் கற்பிக்கப்பட்டுள்ளது. அப்படிப்பட்டதே நம் உபாஸனா தேவதையாகும் ஸ்ரீலலிதையின் சகளரூபம்.

சம்சாரச் சுழலில் அகப்பட்டுத் துன்பப்படும் ஒருவன் சற்குருவை நாடிச் சென்று கண்டு பணிந்து தன்னை உய்விக்க வேண்டுகிறான். கருணாமூர்த்தி யாகிய ஆசார்யர் அவனுக்கு மஹாவாக்கிய உபதேசம் செய்கிறார். உபதேச மாத்திரத்தினாலேயே **நான் பிரம்மம்** என்ற அனுபூதி அவனுக்கு வரப் பெறாதது கண்டு, சாஸ்திர வாக்கியங்களாலும் ஸத்தர்க்கத்தாலும் நன்கு விளக்குவார். அப்பொழுதும் அவனுடைய முகக் குறிப்பால் அவன் ஞானம் வரப்பெறாமை கண்டு இவன் அக்ருதோபாஸகன், ஆகையால் மல விக்ஷேபங்கள் நீங்கப் பெறாதவன், ஞானம் பெறுதற்கு அநுகுணமான உபாசனை இவன் செய்தல் வேண்டும் என்று தீர்மானித்துத் தியானம் செய்தற் பொருட்டு ஓர் வித்யையையும் அது குறிக்கும் ஓர் சகள ரூபத்தையும் உபதேசிப்பார். குருவாக்கியத்தில் பூர்ண நம்பிக்கை வைத்து அந்த உருவத்தைச் சிஷ்யன் தியானிக்கிறான். அத்வைத சாஸ்திரம் நன்கு விளங்காமையால் முதலில் இவனால் அஹங்கிரஹமாகத் தியானம் செய்ய முடியவில்லை, ஆகையால் பரோக்ஷமாக அறியப்படும் அந்த உபாஸனா மூர்த்தியின் உருவத்தின் அழகில் ஈடுபடுகிறான். தியான பாடவத்தால் அவ்வுருவம் அவன் எதிரில் தோன்றிவிடுகிறது. இப்படி உபாஸித்த ஒரு பக்தன்முன் அம்பாள் ஸர்வாங்க ஸுந்தரியாய்த் தோன்றிவிடுகிறாள். அப்பொழுது அவன் மனநிலை எவ்வாறு இருக்கும் என்பது ஆராய வேண்டியது ஆகும்.

ஜீவப்பிரம்மைக்கிய ஞானம்தான் மோக்ஷத்தைத் தருவதாகும்; அதற்கு ஸஹகாரியாக உள்ளது **அஹங்கிரஹ ரூபமான** தியானம்; ஆத்மாவேயாகும்

லவிதைக்கு ஸகளரூபமோ உண்மையல்ல, என்னும் அறிவுரையை சற்குருவானவர் சிடனுக்கு உபதேசிப்பார். சிஷ்யன் அடிக்கடி அவரைச் சென்று தரிசித்து வந்தால்தான் இத்தகைய உபதேசம் திரும்பத் திரும்பப் பெறுவான். அதனுல் தனக்கு அன்னியமாகத் தேவதை இருப்பதாகத் தியானித்தலைவிட்டு அபேதமான தியானத்தில் இறங்குவான். அவ்வாறு இல்லாது முதற்கண் தனக்குக்கூறிய சகள ரூபமே உண்மையானது என்று ஹடத்துடன் செய்த தியானத்தால் எதிரில் காணப்படுகிறது தேவதையின் ரூபம்.

தாயாக அம்பாளை உபாஸிப்பினும் அவள் எதிரில் சர்வாங்க சுந்தரியாய்த் தோன்றியபோது ஓர் தவறு ஏற்பட வழியுண்டு. அவளுடைய பெண்மை அழகில் சாதகனுடைய மனம் ஈடுபடுமாயின் வந்தது அனர்த்தம். சாதகன் மீளா நரகப் படுகுழியில் விழ்கிருன். கருணை மிக்க தாயேயாயினும் இத்தகைய தவருல் ஏற்படும் பாபத்தைப் போக்குதற் பொருட்டு அவனுக்குத் தண்டனை கொடுக்கிருள். பல ஜன்மங்கள் அத்தண்டனை அனுபவித்துப் பின் அம்பாளையே அனுக்கிரஹமாக உபாஸித்து நற்கதி அடையவேண்டிவரும். ஆகையால் உபாஸனை செய்யுங்கால் இத்தகைய தவற்றினின்றும் சாதகனைக் காத்தற் பொருட்டுக் காமகலாத்தியானம் இன்றியமையாததாக விதிக்கப்பட்டுள்ளது.

இக் காமகலாத்தியானமும் இருவகையாகச் சாதகனின் பக்குவ நிலையைப் பொருத்திருக்கிறது.

தியேயம் பெண் உருவம் உடையது. ஆதலால் அதன்கண் மனத்தை ஈர்க்கும் அங்கங்கள் மூன்று

உண்டு. அவை வக்த்ரம், வக்ஷோஜம், குஹ்யம் என்பனவாம்.

தேவியின் இந்த ஸ்தூல அங்கங்களைச் சாதகன் தன் உடலில் உள்ள அப்பாகங்களோடு அபேத மாகப் பாவிக்கலாம். இது சாதாரணமான பாவனை யாகும்.

அவற்றை முறையே ஜீவஜகத் பரமாகப் பாவித் தல் உத்தமமானதாகும். திரிகுணாத்மகமான மாயா விசிஷ்ட சைதன்யம் சகலத்திற்கும் பிறப்பிடமாகும். அதனால் அது **யோனி** என்னும் பெயரைப் (அபி தானம்) பெற்றது. உண்மையில் அது யோனி அல்ல, ஸர்க்கம் என்றால் சிருஷ்டி, விசேஷமாக அதாவது பிரம்மாண்டம் முதல் பிண்டாண்டம் ஈறுகஸ்தூல ஸூக்ஷ்மங்களாகச் சிருஷ்டிக்கப்பட்ட சிருஷ்டியே விஸர்க்கமாகும். அது த்விபிந்து ரூபம். அதுவே **வக்ஷோஜம்** என்ற அபிதானம் பெற்றது. சூரியனுடைய கிரணங்களைப் பெற்றுப் பூமிக்கு வெளிச்சம் தருவது சந்திரனாகும். கூடஸ்த சைதன் யத்தின் பிரகாசம் அந்தக்கரணத்தில் பிரதிபலித் துத்தோன்றும் சிதாபாஸன் சந்திரன் போன்றவன். அவன் சாக்ஷியின் பிரகாசத்தைக்கொண்டே பிரமே யத்தை விளக்குவது ஈண்டு அறியத்தக்கது. ஆகை யால் அவன் **வக்த்ரம்** என்னும் பெயரை அடை கிறான். இம்மூன்றன் ஸ்வரூபங்களை ஆராய்ந்து நிச்சயம் செய்ய அவை சம்வின்மாத்திரமான ஒரே பிந்துவாக முடிகின்றன. இதனையே சித்சக்தி என் கிறோம். இதனால் சாதகனாகிய தனக்கும் உபாஸ்ய தேவதையாகிய லலிதைக்கும் அபேதம் சித்திக் கின்றது. பிரம்மமே நான் என்னும் முடிவான அனு பவம் ஏற்படும். இதுவே **காம கலா விமர்சனமாகும்.**

**சாமயிக பூஜை**

சாமயிக பூஜை தேவி உபாஸகர்களுக்கு ஏற்பட்டுள்ள அசாதாரண தர்மமாகும், பாஹ்ய சாமக்கிரியைகளை வைத்துக்கொண்டு ஸபர்யை செய்ய முடியாவிட்டாலும் உபாஸகன் சாமயிக பூஜை ஒன்றிலாவது கலந்துகொண்டால் போதுமானது.

ஆசாரியன் அக்ருதோபாஸகனுகிய சிஷ்யனுக்கு மஹாவாக்கிய உபதேசம் செய்தோ செய்யாமலோ அதற்குத் துல்யமான ஒரு வித்யையும், அதற்கு ஒரு தேவதையின் ஸ்வரூபமும், அதை ஆராதிக்கும் முறையும், அதை அஹங்கிரஹமாகத் தியானிக்கும் வழியும் உபதேசிக்கிறுர். இவை முழுதும் மந்திர தீக்ஷையின் பாற்படும்.

இம்மந்திர தீக்ஷை பெற்றவரே சாமயிக பூஜையில் கலந்துகொள்ள அதிகாரியாவர். இதன் சம்பந்தமாகச் சாமயிகர் அறியவேண்டிய சிலகொள்கைகளும் பின்பற்றவேண்டிய சில விதிகளும் உள்ளன.

ஸபர்யை நடக்கும் இடத்திற்குப் **பைரவி சக்ரம்** என்று பெயர். அங்கு ஒரு பரம்பரையைச் சேர்ந்தவர்கள்தான் கூடலாம். இம்மார்க்கத்தைச் சேர்ந்த வேறு பரம்பரையினரும் வரலாம். ஸபர்யை நடப்பதைக் கேள்வியுற்ற அப் பரம்பரையினர் யாவரும் வந்து கலந்து கொள்ளலாம் என்பது சம்பிரதாயமாகும். இதில் கால தேச வர்த்தமானங்களையும் கவனிக்கவேண்டியிருக்கிறது.

பைரவி சக்ரத்தை வந்தடைந்த யாவரும் இவிஜர்களே; பூஜோத்வாஸனம் வரையில் வேறுபாடு இல்லை.

சிஷ்யர்களின் கூட்டத்தை மண்டலி என்று வியவஹரிப்பதுண்டு. மண்டலி என்பது ஸமூஹம் அல்லது தொகுதி என்று பொருள்படும். சிஷ்யர்கள் ஒருவரோடு ஒருவர் லௌகிக சம்பந்தம் உடையவரல்லர். சம்பந்தம் இல்லாதவரை ஒரு தொகுதியினர் என்று கூறுதல் பொருந்தாது. அங்குக் கூடியவருள் முக்கியமானவர் குருவாவர். அவருடன் ஒவ்வொரு சிஷ்யனுக்கும் தனித்தனியாகச் சம்பந்தம் உண்டு. குரு ஒருவனைச்சிஷ்யனாக ஏற்றுக்கொண்டபின் அச்சிஷ்யனுக்குச் சிஷ்யத் தன்மையிலிருந்து விடுபட்டுச்செல்ல உரிமையில்லை. விரும்பினால் குரு அவனை விலக்கலாம். ஆகவே, சிஷ்யனுக்குக் குருவுடன் உள்ள சம்பந்தம் பரம்பரையாகிய சங்கிலியில் சிஷ்யன், தான் கடைசி வளையமாக இருந்து தனக்கும் தன் குருவுக்கும், பரம குருவுக்கும், பரமேஷ்டிகுருவுக்கும், இவ்வாறு சரியானந்த நாதர் வரையிலுள்ளவர்களாகிய அச்சங்கிலியின் ஒவ்வொரு வளையத்துக்கும் பரம்பரா சம்பந்தம் உடையவனாய் இருக்க அந்தச் சங்கிலி போன்ற தொகுதிக்கு **மண்டலி** என்று பெயர். ஒருவன் மண்டலப் பிரவேசம் செய்விக்கப்பட்டான் என்றால் குருவினால் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளப்பட்டுக் குரு பரம்பரா ஞானம் தரப்பட்டான் என்பது பொருள். ஆகவே, மண்டலி என்றால் சிஷ்யர்களின் கூட்டம் என்ற பொருளை உடையது என்பது கௌணார்த்தமாகும்.

தன் குருவின் பிற சிஷ்யர்களில் ஜ்யேஷ்டர்களுக்கு மரியாதை கொடுக்கவேண்டும். இங்கு ஜ்யேஷ்டத்தன்மை இந்தக் குருவைத் தனக்கு முன் அடைந்தமையாகிய கால அளவைப் பொருத்ததாகும்.

சாமயிக பூஜைசெய்ய விரும்புவோர் ஒவ்வொருவரும் ஸமஷ்டி புஷ்பாஞ்சலி மந்திரத்தைச்சொல்லி ஸ்ரீசக்கிரத்தில் உபாஸ்ய மூர்த்திக்குப் புஷ்பாஞ்சலி கொடுப்பதன் மூலம் தம் விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும்.

பூஜகனுல் குரு முதலில் உபசரிக்கப்பட்டுக் குரு பாத்திரம் கொடுக்கப் பெறுவார். பின் கௌள சந்நியாசிகள் வந்திருந்தால் அவர்களும், பிறமண்டலியைச் சேர்ந்த பெரியோர்களும் உபசரிக்கப்பட வேண்டும். அவர்களுக்குப் பின் ஸஹ சிஷ்யர்களில் பூர்ண தீக்ஷை பெற்ற ஜ்யேஷ்டர்கள் உபசரிக்கப்படுவர். பிறகு பஞ்சதசி பாலே ஆகிய மந்த்ரங்கள் உபதேசம் பெற்றவர்கள் வரிசையாக உபசரிக்கப்படுவர். இங்கு உபசாரம் என்பது சந்தனம் முதலியன கொடுத்தலாம். கூடியுள்ள சாமயிகர் தம்தம் ஆத்ம பாத்திரத்துடன் வந்திருக்கவேண்டும். வேறு பாத்திரங்களில் தத்துவசோதனம் செய்தல் இரண்டாம் பக்ஷமேயாகும்,

எல்லோரும் குரு ஆத்ம தேவதா யஜனங்களை நின்றுகொண்டுதான் செய்யவேண்டும். பூர்ண தீக்ஷை பெற்றவர் உட்கார்ந்தும் செய்யலாம். தத்துவ சோதனம் மட்டும் எல்லோரும் உட்கார்ந்தே செய்யவேண்டும். பிறகு நின்றுகொண்டு ஆத்ம பாத்திரத்தைச் சிரசில் வைத்துக் குருவிடம் சமர்ப்பித்து வணங்கி ஆத்ம பாத்திரத்தைப் பெற்று உட்காரவேண்டும். இவ்வளவு கட்டுப்பாடும் குருவேண்டியவாறு மாற்றிவிடலாம்.

முதலிலேயே சமஷ்டி புஷ்பாஞ்சலி கொடுத்தாகிவிட்டது. பின் இடது கையில் தத்துவ முத்

திரையால் திவிதிய சகலத்தைப் பிடித்துக்கொண்டு அதை விசேஷார்க்கியத்தில் சிறிது தோய்த்து அந்தப் பிந்துவையும் வலது கையில் சின் முத்திரையால் கொண்ட புஷ்பத்தையும் ஒரே சமயத்தில் ஆசார்யரின் பாதகமலங்களில் ஸ்வகுரு பாதுகா மந்த்ரத்தை உச்சரித்துத் தர்ப்பணம் செய்ய வேண்டும். இவ்வாறு மூன்று முறை செய்து குருவின் சிரசில் மேற்கூறியவாறு பரமகுரு பரமேஷ்டி குரு பாதுகா மந்த்ரங்களால் மும்மூன்றுமுறை தர்ப்பணம் செய்ய வேண்டும். பின் தன் ஹ்ருதயத்தில் ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஞானத்மா என்னும் ஆத்ம சதுஷ்டயத்தை அவ்வவற்றிற்கு உரிய மந்த்ரங்களைக் கொண்டு தர்ப்பணம் செய்ய வேண்டும். பிறகு ஸ்ரீ சக்ரத்தில் கணபதி, பாலை, ஸௌபாக்கிய வித்யை அல்லது மஹா ஷோடசி என்னும் மந்த்ரங்களால் முறையே மும்மூன்றுமுறை தர்ப்பணம் செய்யவேண்டும். பிறகு அங்கப் பிரத்தியங்க உபாங்க தேவதைகள் பரை ஆகியவற்றிற்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். பிறகு சண்டி முதலிய பிற எல்லாத் தேவதைகளுக்கும் தர்ப்பணம் செய்து முடிவில் மறுமடியும் தன் மூல மந்த்ரத்தால் மூன்று முறை தர்ப்பணம் செய்யவேண்டும். அதன்பின் உட்கார்ந்து கொண்டு த்விதிய சகலத்தைக் காரணத்தில் சேர்த்து ஆத்ம பாத்திரத்தை இடது கையில் கபால முத்திரையால் தாங்கிக்கொண்டு வலது கையால் மூடிக்கொண்டு தத்துவ சோதனம் செய்யவேண்டும். பின்னர் குருவினிடத்தில் உத்தரவு பெற்று விசேஷார்க்யத்தை ஹோம புத்தியுடன் ஸ்வீகரித்து ஆத்ம பாத்திரத்தைக் குல பாத்திரத்தில் கழுவிச் சாமான்னியார்க்கியத்தால் தூய்

மைப்படுத்தித் துடைத்து ஸ்வர்ணத்தாலும் புஷ்பத்தாலும் நிறைவித்துக் குருவினிடத்தில் அர்ப்பணம்செய்து வணங்கவேண்டும்.

ஸபர்யை நடக்கும் இடத்திலும் சாதகர் பலர் கூடியுள்ள இடத்திலும் வணங்கும்பொழுது பஞ்சாங்க நமஸ்காரமே போதுமானது. குருவின் சன்னிதானத்தில் அவசியமானல் அவருடைய உத்தரவு பெற்றே ஜபம், பூஜை, கீர்த்தனம், பாராயணம் முதலியன செய்தல்தகும். தாம் பின்பற்றும் சாக்தக்கொள்கையை எவ்வளவுக் கெவ்வளவு இரகசியமாக வைத்துக்கொள்கிருர்களோ அவ்வளவக் கவ்வளவு அது அதிகப் பயனைத்தரும். பிறர் அறிய வேண்டி முத்திரைகளைக் காட்டுதல் அழகல்ல. குருவுக்கும் முத்திரைகள் காட்டக் கூடாது என்பது சம்பிரதாய விதியாகும்.

குருவினிடத்தில் உபதேசமாகப் பெற்ற ஞானத்தை அடிக்கடி அப்பியஸிக்கவேண்டும். அப்பியஸிக்கும் முறையும் குரு சொன்னபடியே இருக்க வேண்டும். இதற்குத் தகுதியான வித்யை, முறை முதலியன ஒவ்வொரு சாதகனுடைய பக்குவ நிலைக்கு ஏற்ப வெவ்வேருக இருக்கும். ஆகையால் தத்தமக்கு ஏற்படும் சந்தேகங்களைத் தன் ஆசார்யனிடத்திலேதான் கேட்டு அறிந்துகொள்ளவேண்டும். இதன் பொருட்டுச் சிஷ்யன் அவ்வப்பொழுது குருவைக் கண்டு தரிசித்துப் பணிந்து தான் செய்யும் சாதனைகளைத் தெரிவித்துவரவேண்டும். இத்தகையதுதான் சாமயிக பூஜை.

ஸ்ரீவித்யோபாசனையின் பிற அங்கங்களைப் போலவே சாமயிக பூஜையும் ப்ரதீக உபாசனையின்

பலமும் அஹங்கிரஹ உபாசனையின் பலமும் அவரவர் பாவனைக்கு ஏற்றவாறு தருவதாகும்.

த்விதீய சகலம் ஈச்வர ஸ்வரூபமாகும். விசேஷார்க்கியம் ஜகத்தின் ஸ்வரூப விமர்சனத்தைக் குறிக்கும். தத்துவ முத்திரையால் த்விதீய சகலத்தைப் பிடித்து விசேஷார்க்கியத்தில் தோய்த்தலால், சிவாதி அவனி பரியந்தமான தத்துவங்களின் ஸ்வரூபம் விமர்சிக்கத் தகுந்தது என்று ஏற்படுகின்றது.

கட்டை விரல் சிவத்தையும் ஆள்காட்டி விரல் ஜீவனையும் மற்ற மூன்று விரல்களும் முறையே ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களையும் குறிப்பனவாகும். சின்முத்திரையில் கட்டைவிரலுடன் ஆள்காட்டி விரல் சேர்ந்திருக்கும். மும்மலங்களாகிய கஞ்சுகங்களையுடையவன் சிவன். அக்கஞ்சுகங்கள் அற்றது சிவம். அதன் ஸ்வரூபம் சைதன்யம். இது சின்முத்திரையால் புஷ்பத்தைக் கொள்ளுதலால் அறியப்படுகிறது, இது ஜீவனைப் பற்றிய விமர்சமாகும்.

குரு ஈச்வரனே ஆவர்; அவர் திருவடிக் கமலங்கள் பிரகாச விமர்சங்களாகும்; அப் பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்யமே சித் சக்தியாகும்.

குரு பாதுகாயஜனத்தால், ஜகத் ஜீவ பரங்களாக விளங்குவது பிரகாச விமர்ச ஸாமரஸ்யமான சித்சக்தியாகும் என்பது பொதுவாக விளங்கும்.

ஸ்வகுருவின் ஸஹஸ்ராரத்தில் பரம குருவும், பரம குருவின் ஸஹஸ்ராரத்தில் பரமேஷ்டி குருவும் பாவிக்கப்படவேண்டும். ஆகையால் ஸ்வகுருவின் சிரசிலேயே பரமகுரு பரமேஷ்டி குரு பாதுகா யஜனங்கள் செய்யப்படுகின்றன.

ஸ்வகுரு பாதுகா மந்திரத்தால், எப்பொழுதும் அபரோக்ஷமாகவே அறியப்படும் ஆன்மாவின் ஸ்வரூபம் சச்சிதானந்தம் என்று நிரூபணம் செய்யப் படுகிறது. இது **த்வம்பதலக்ஷியார்த்த**மாகும்.

பரமகுரு பாதுகா மந்த்ரத்தால், பரோக்ஷமாக, மாயா விசிஷ்ட சைதன்னியம் என்றும் பிரபஞ்சத் திற்கு நிமித்தோபாதான விவர்த்தகாரணன் என் றும் அறியப்படும் ஈச்வரனின் ஸ்வரூபமானது ஆராய்ச்சியால் நிஷ்பிரபஞ்சமாயும், மாயை என்ற ஒன்று சிறிதும் தன்னிடத்தில் இல்லாததாயும் ஸ்வச்சமாய்ப் பிரகாச விமர்ச ஸாமரஸ்யமாய் விளங் கும். இதுவே சச்சிதானந்த கன பிரஹ்மம். இது **தத்பத லக்ஷியார்த்த**மாகும்.

பரமேஷ்டி குரு பாதுகா மந்திரத்தாலோ, முன் பரோக்ஷமாக அறியப்பட்ட பிரஹ்மம் இப்பொழுது பிரத்தியகாத்மாவாகும் தன் ஆத்ம தேஜஸ்ஸாக அபரோக்ஷமாக அறியப்படுகிறது. இது **அஸி** என்னும் பதார்த்தமாகும்.

ஆக, குரு யஜனத்தால் அஹம்பிரஹ்மாஸ்மி யென்னும் அனுபவரூப ஜீவப்பிரஹ்மைக்யாநு சந்தானம் செய்யப்பட்டதாகும்.

பின் ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஞானத்மா யஜனங்கள் சாதகன் தன் ஹிருதயத்தில் செய்கிருன்.

ஆத்மா — ஸ்தூலதேக அபிமானியாகிய ஜீவன் (விச்வன்)

அந்தராத்மா— சூக்ஷ்ம தேக அபிமானியாகிய ஜீவன் (தைஜஸன்)

பரமாத்மா — காரணதேக அபிமானியாகிய ஜீவன் (பிராக்ஞன்)

ஞானத்மா — சர்வ தேக அபிமானியாகிய ஸமஷ்டி ஜீவன்

இந்த ஆத்ம யஜனத்தால் பஞ்சகோச விலக்ஷணமானதும்; தேகத்திரயங்களாகும் த்ரிபுரங்களுக்கும் அதிஷ்டானமானதும் ஆகிய லலிதா த்ரிபுர சுந்தரியாகும் சித்சக்தியே தன் ஆத்மா என்று மயக்கமற அறிதலாகும். இதுதான் பரிசுத்தமான அந்தர் ஜ்யோதிஸ்ஸாகும். இது, ராஜோகுண தமோகுண காரியங்களான விக்ஷேப மலங்கள் நீங்கப் பெற்ற சுத்தாந்தக்கரணத்தால்தான் அவ்வாறு அறியப்படும். அவ்வாறு அறிதலே, ஜீவோஹம் என்னும் பாவம் நீங்கப்பெற்று பிரஹ்மைவாஹம் என்ற அசைக்கமுடியாத நிச்சயத்தை யடைந்து நிற்றலாகிய ஆத்ம சோதனமாகும்.

ஸ்ரீ சக்ரம் பிரம்மாண்ட பிண்டாண்ட ரூபமான பிரபஞ்சத்தைக் குறிப்பதாகும். அதன்கண் பிந்துவில் மூல மந்த்ரத்தால் தேவிக்கு யஜனம் செய்யப்படுகிறது. சிதானந்த இச்சா ஞான கிரியா ஸ்வரூபிணியாகிய தேவியே அஸ்திபாதி பிரிய நாமரூப வடிவமாக உள்ள பிரபஞ்சமாக விளங்குகிருள் என்று அறியப்படுகிறது. உண்மையை ஆராய்ந்து பார்க்க நாமரூபங்களும் இச்சாஞான கிரியைகளும் மாயா காரியங்களாக ஏற்படும். ஆகையால் எஞ்சி நிற்கும் அஸ்தி பாதி பிரியரூபமாகத் தேவி பிரபஞ்சத்தில் விளங்குகிருள் என்று ஏற்படும். அதாவது, அவள், கண்ட கண்டமாக அறியப்படும் பிரபஞ்சத்தில் உள்ள அகண்ட ஞானமாகும். உண்மையில், அறியப்படும் ஒவ்வொன்றும் ஆன்மாவினுல்தான்

விளங்குகிறது. அதாவது, பிரபஞ்சத்தின் விளக்கம் ஆத்மாவின் ஸ்வரூப விளக்கமேயாகும். இதனைத் தான் விமர்ச சக்தி என்கிறோம். இதுதான் ஞானம். பிரகாசம் சிவம், விமர்சம் சக்தி. இப்பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்யமே ஆனந்தமாகும். ஸாமரஸ்யம் என்றால் அவை இரண்டும் ஒன்றேயாகும் என்னும் உணர்வாம். இவை விசாரம் செய்யும் பொருட்டுப் பிரித்துக் கூறப்பட்டவையாகும். வஸ்து, தான் விளங்குவது பிரகாசமாகும். அது விளங்குவது என்பதை அறிவதற்கு அதன்கண் உள்ள சக்தி எதுவோ அது விமர்சமாகும். இந்த விமர்சமே ஜகத்ஜீவ பரங்களாக விளங்குகிறது. இந்த விமர்சம்தான் உண்மை (சத்) என்று அறிவதால் இரண்டற்ற நிலை ஏற்படுகிறது. இதுதான் ஆனந்தம்.

சாதகனுக்குப் பிரபஞ்சத்தில் இந்த விமர்ச சக்தி பரோக்ஷமாக அறியப்படுகிறது. இதுதான் ஈச்வரனுடைய ஸ்வபாவ சக்தி. பிந்துவில் யஜனம் செய்யப்படும் மந்த்ரங்களால் குறிக்கப்படும் எல்லாத் தெய்வங்களும் இந்த ஸ்வாபாவகீ சக்தியின் மயூகங்களாக அறிதல் வேண்டும். ஆகையால் அவற்றிற்கும் தேவிக்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லை என்பது அறிதல் வேண்டும். இதைக் குறிக்கவே முடிவிலும் மூல மந்த்ரத்தால் யஜனம் செய்யப்படுகிறது.

இதற்குப் பின் த்விதிய சகலத்தை ஆத்ம பாத்திரத்தில் உள்ள ஹேதுவில் சேர்த்து அப்பாத்திரத்தை இடது கையில் கொண்டுள்ள கபால முத்திரையினால் தாங்கி வலது கரதலத்தால் மூடிக் கொண்டு தத்துவ சோதனம் செய்யப்படுகிறது.

த்விதிய சகலம் ஈசுவரனைக் குறிக்கும் என்று முன்னமே கூறினோம். அவன் மாயா விசிஷ்ட

சைதன்னியம் ஆவன். விமர்சிக்கப்பட்ட பிரபஞ்சத்திலும் மாயை நாமரூபங்களாகவும் சைதன்னியம் அஸ்திபாதி பிரியங்களாகவும் உள்ளன. இவையன்றிப் பிரபஞ்சம் வேறு இல்லை. இப்பிரபஞ்சத்திற்கும் ஈசனுக்கும் சிறிதளவும் பேதமில்லை. எங்கேயோ இருப்பதாக எண்ணப்படும் ஈசன் நம்முன் பிரபஞ்சமாகத் தோன்றுகின்றான். ஆக, ஈசனில் உள்ள மாயா பாகத்தைப் பிரபஞ்சத்திலுள்ள நாமரூபங்களிலும், ஈசனின் சைதன்னியத்தைப் பிரபஞ்சத்திலுள்ள அஸ்திபாதி பிரியங்களிலும் பார்த்தலே திவிதிய சகலத்தைக் காரணத்தில் சேர்த்தலாம்.

ஆத்ம பாத்திரத்தைப் பிரதிஷ்டிப்பதற்கு ஏற்பட்டுள்ள மந்திரத்தை ஆராய்ந்தால் ஆத்ம பாத்திரத்தின் ஸ்வரூபம் விளங்கும். அது **ஹம்ஸ: நம:** என்பதாகும்—அது அஹம், ஸ: என்னும் இரண்டு சொற்களின் சேர்க்கையால் வந்ததாகும். இச்சொற்களில் அஹம் ஜீவனையும், ஸ: ஈசுவரனையும் குறிப்பனவாகும். சமான அதிகரணத்தால் இவ்விரண்டுக்கும் அபேதம் கொள்ளப்படுகிறது. ஆக, இம்மந்த்ரம் மஹாவாக்கிய துல்யமாய் நின்று ஜீவப் பிரம்மைக்கியத்தைப் போதிப்பதாகும். இம்மந்திரத்தால் பிரிதிஷ்டிக்கப்படுவதால் ஆத்ம பாத்திரம் ஈசுவரசித்துக்கு வேறு அல்லாத சாக்ஷி சைதன்னியத்தைக் குறிப்பதாகும்.

முன்னர், ஈசுவரனே இப்பிரபஞ்சமாக இருக்கிறான்; அதாவது, ஈசுவரனுக்கும் இப் பிரபஞ்சத்திற்கும் பேதமில்லை என்பது பெறப்பட்டது. இனி, அந்தத் திவிதிய சகலத்தோடு கூடிய விசேஷார்க்கியத்தை ஆத்ம பாத்திரத்தில் கொண்டிருப்பதற்கு ஓர் விமர்சனம் உண்டு.

இப்பிரபஞ்ச மெல்லாம் விளங்குவது சாக்ஷி சைதன்னியத்தால்தான். அதாவது, நாமரூபங்கள் அஹம்பத லக்ஷியார்த்த சித்தால்தான் விளங்குகின்றன. ஆதலால் பிரபஞ்சத்திற்கு இருப்பு சாக்ஷி சைதன்னியத்தில்தான். இச்சாக்ஷி சைதன்னியமோ சச்சிதானந்த கனமாய், பிரபஞ்சத்தில் அஸ்திபாதி பிரியமாய், ஈசனிலும் அவ்வாறே சச்சிதானந்த கனமாய் உள்ளது. இவ்வுண்மையைச் சந்தேக விபரீதங்களின்றி அறிந்தவன் இப் பிரபஞ்சத்தைத் தானுகப் பார்ப்பான். ஈசனையும் தானேயாக அறிவான். ஆகையால் இவன் “என்னிடத்திலிருந்தே சகலமும் பிறந்தன. என்னிடத்திலேயே ஸர்வமும் பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளன. என்னிடம்தான் ஸர்வமும் லயம் அடைகின்றன. அந்த அத்விதிய பிரஹ்மம் நானுய் இருக்கிறேன்” என்று சிறிதும் கூசாமற் கூறுவான். இங்கு நான் என்றது ஜீவ பாவம் உடையவனைக் குறிக்காது.

இத்தகைய ஆரூட ஞானிக்கு மிஞ்சுவது அஹம், அஹம் என்னும் ஸாபேக்ஷிக ஸ்புரணம் ஒன்றுதான். அந்த ஸ்புரணமே அறிவாகையால் அதனை அறிய வேறொரு அறிவு இன்மையால் அத்தகைய நிலையை அடைந்த பாக்கியவான் அதனைப் பிறர்க்கு எவ்வாறு விளக்குவான்! அவனே அறிவானே, அறியமாட்டானே!!

அத்விதியமாய்ச் சன்மாத்திரமாய் இருந்த பிரம்மத்தை ஆச்ரயித்த மாயை அப்பிரஹ்மத்திற்கு ஈச்வரத்தன்மை உண்டாக்கிச் சப்தார்த்த வடிவப்பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமாயிற்று. இச்சிருஷ்டியை 36 தத்துவங்களாகச் சைவ சாக்த ஆகமங்கள் பிரித்துக் கூறுகின்றன. அவை சிவாதி அவனி

பரியந்தமானவை. இவை சிருஷ்டி முதல் பிரளயம் வரையில் இருந்து போக்கியப் பொருள்களாகவும் போகங்களாகவும், போகாயதனமாகவும் உள்ளமை யால் **தத்துவங்கள்** என்று வியவஹரிக்கப்படுகின்றன.

ஈண்டு ஓர் ஐயம் நிகழ இடம் உண்டு. இத் தத்துவங்களில் முதற்கண் காணும் சிவம் சக்தி இரண்டும் கூட மேலே குறிக்கப்பட்டது போன்ற தத்துவங்களா? இவையும் சிருஷ்டிக்கப்பட்ட பிர பஞ்சத்தில் அடங்கியவையா? எனின், ஆம் என்றே கூறிவிடலாம். ஏனெனின், ஒன்ருன ஆன்மாவா னது சிவம் என்றும் சக்தி யென்றும் பிரிதற்குக் காரணமான க்ஷோபம் அதனிடத்தில் உண்டானது மாயையால்தான். ஆகையால் அவை இரண்டும் 36 தத்துவங்களில் சேர்ந்தவையே. உண்மையில், பிரஹ்மமானது சிவம் என்ருே சக்தி யென்ருே இரண்டாகப் பிரியவும் இல்லை. அதனிடத்தில் க்ஷோபம் ஏற்படவும் இல்லை. பிரஹ்மத்தில் மாயை சேரவும் இல்லை. இவ்வாறு கற்பித்துக் கூறியது அஞ்ஞானியாகிய ஜீவன் உய்தற் பொருட்டாகும். பிரபஞ்சமோ சிருஷ்டி ஆகவேயில்லை. ஆயினும் ஜீவன் பிரபஞ்சம் என்று ஒன்று இருப்பதை அறி கிருன். அவன் பொருட்டு இவ்வாறெல்லாம் சாஸ்த்திரம் பிரவர்த்தித்துள்ளது.

இத்தத்துவங்களை ஆராய, அவையெல்லாம் ஜகத்து, ஜீவன், ஈசன் ஆகிய மூன்றனுள் அடங்கு வன. இவற்றின் ஸ்வரூபமோ முன்னே ஆராய்ந்த படி சித்கனமான பிரஹ்மமேயாம். இச் சித்கனத்தை வித்யா ஸ்வரூபிணியாகிய சித்சக்தி யென்று வியவஹரிக்கிருேம்.

கண்ட கண்டமாகக் கோசரமான தத்துவங்களெல்லாம் இப்பொழுது பூர்ணமான சித்சக்தியாக விளங்கும். இதுவே ஜீவனுடைய சாக்ஷி சைதன்னியம் என்பது மறக்கக்கூடாது. இது, த்ரிபுடியில் அடங்கும் எல்லாத் தத்துவங்களும் விளங்குவதற்குக் காரணமாகி, தான் விளங்குவதற்கு வேறொன்று வேண்டாது நிற்றலால் இதனைத் துரீய வித்யையால் குறிப்பர்.

இந்தப் பிரஹ்மாபின்ன சித்சக்தி நிரவயவி, காலதேச வஸ்துக்களால் பரிச்சேதமற்றது. ஆகையால் பூர்ணமானது. இது ஈச்வர பிரபஞ்சங்களில் பூரணமாக உள்ளது. இங்குச் சிவனிடத்திலும் பூர்ணமாக உள்ளது. பூர்ணமான பிரஹ்மத்தில் இருப்பு உடையதாய்ச் சிருஷ்டிக்கப்பட்ட இப்பிரபஞ்சமும் ஸ்வரூபத்தால் பூர்ணமாகத்தான் உள்ளது. பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்பட்டாலும் பிரஹ்மத்தின் பூரணத்தன்மைக்கு ஹானி இல்லை. ஆகையால் பிரபஞ்ச உபசமமான நிலையிலும் இருப்பது பூரணமே.

இத்தகைய அகண்ட ஞானம் ஏற்படவே இதமாகார விருத்தியே இல்லாமற் போகும். அப்பொழுது ஸாபேக்ஷிகமான அஹமாகார விருத்தியும் இல்லாது கேவல ஸ்புரணமாத்திரம் நிற்கும்.

இத்தகைய அதிஸூக்ஷ்மமான ஆராய்ச்சி ஸர்வேச்வரனின் வேறல்லாது மானிட வேடம் பூண்டு என்னை உய்விக்க அவதரித்த குருதேவரின் பிரகாச விமர்ச ஸ்வரூப பாதகமலங்களின் துணை ஒன்று கொண்டே செய்யப்பட்டது.

இத்தத்துவசோதனம் செய்யுங்கால் அவ்வெல்லாத் தத்துவங்களும் இடது கையிலுள்ள ஆத்ம

பாத்திரத்தில் உள்ளதாகப் பாவனை செய்யவேண்டும். முடிவில் குருவினிடத்தில் "இவற்றை ஹோமம் செய்கிறேன்" என்று கூறி அவரது உத்தரவு பெற்று அவ்வாத்மபாத்திரத்தில் உள்ளதை ஹோமம் செய்யும் புத்தியுடன் ஸ்வீகரிக்கவேண்டும். இது கிரியையில் குடிப்பதாகக் காணப்பட்டாலும் பாவனையுடன் செய்யின் ஹோமமேயாகும். எல்லாத் தத்துவங்களும் என் ஆன்மாவாகிய சிதக்னியில் ஹோமம் செய்துவிட்டேன் என்ற எண்ணம் உடையவனாகவேண்டும். ஹோமம் செய்யப்பட்ட நெய் எரிந்து தன் நாமரூபம் முற்றும் அழிந்து அக்னிரூபமாக மாறிவிடுவதுபோல இத்தத்துவங்கள் தன் ஆத்மாவின் ஸ்வரூபமான சின்மயமாக விளங்கும். எங்கும் எல்லாம் சின்மயம் ஒன்றேயாய் விளங்க இரண்டற்ற அந்நிலையில் ஏற்படும் அநுபவம் ஆனந்தம் ஒன்றுதான். இது பாஹ்யவஸ்து ஜனித ஆனந்தம் அன்று. மது முதலிய பாஹியப்பொருள்களால் பெறக்கூடிய ஆனந்தம் ஒரு சமயத்தில் முடிவடைந்து அதனல் துக்கத்திற்கு ஏதுவாகும். அவற்றை ஞானப்பியாசத்திற்கு ஸஹகாரிகளாக மாற்றிக்கொள்ளும் திறமையும் மன வலிமையும் சாதகனுக்கு இருக்குமாயின் அவற்ருல் யாதொரு துன்பமும் விளையாது. அவற்றைப் பசு துல்யமாய் உபயோகித்துக்கொண்டு தந்த்ர சாஸ்திரங்களின் வசனங்களைத் தனக்கு ஆதாரமாகக்காட்டுவாளுயின் அவன் தன்னைத்தான் ஏமாற்றிக்கொள்பவன் ஆவன். முடிவில் மீளா நரகப்படுகுழில் விழ்வான். அப்பொருள்களிலிருந்து பெறும் ஆனந்தமானது பிரியம், மோதம், பிரமோதம், ஆனந்தம் என்று சாஸ்திரங்களால் பகுக்கப்பட்டுள்ளது. அது தன்

ஆன்மாவின் ஸ்வரூப ஆனந்தமே என்று சந்தேக விபரீதங்களின்றி அறிபவன் அவற்றை ஸ்வீகரிக்கலாம். அவற்றை ஸ்வீகரிக்கும் மனநிலை ஒருவனுக்கு உள்ளதா என்பது அவனுக்கு அவனே பார்த்துக்கொள்ள வேண்டுமேயன்றிப் பிறரால் அறியப்படுவது அன்று தனக்கு அவ்வுயர்நிலை உண்டு என்று நினைப்பவனும், பிராந்தியால் அவ்வாறு நினைத்தற்கு இடம் உண்டு. ஆகையால் குரு ஒருவர்தான் அவனைச் சோதித்து அறிவதற்கு உரிய அறிவும், பெருமையும், அநுபவமும் உடையவர். ஆகையால் அவர் உத்தரவு பெற்றே அவற்றைத் தன் ஆன்மவிசாரத்திற்கு ஸஹகாரிகளாக உபயோகிக்கலாம். இவற்றைப்பற்றிய விசாரம் இவ்வாருக இருக்க, **இக்கௌள மார்க்கத்திற்கு நம் குஹானந்த மண்டலியினருக்குப் பிரவேசமே இல்லை** என்பது தெளிவாக அறிய வேண்டும். "நாம்தாம் ஆத்மவிசாரம் செய்துவிட்டோமே நமக்கென்ன மனம் சலனம் ஆகிவிடுமா? நமக்குக் கட்டுப்பாடு எது?" என்றெல்லாம் வாய் வேதாந்தம் பேசிவிட்டு அவ்வழியில் இறங்கலாகாது என்பதை வற்புறுத்தவே இவ்வளவும் எழுதப்பட்டது. இவையாவும் குருநாதரின் அநுமதி பெற்றே வெளிப்படுத்தப்பட்டவை என்பதை உணர்ந்து ஸாதகர்கள் என்னை மன்னிப்பார்களாக.

ஆகையால், சாதகன் தான் செய்யும் சாதனை குருவின் ஸன்னிதியில்தான் செய்யவேண்டும். அச்சாதனைக்குக் கொள்ளும் சாமக்கிரியைகளும் அவர் அறிய, அவர் முன்னிலையில்தான் உபயோகிக்க வேண்டும். ஆதலால்தான், மேற்கூறிய தத்துவ சோதனம் செய்த சாதகன், இத்தத்துவங்களெல்

லாம் என் ஆன்மாவிலேயே இருப்புடையன என்னும் பாரமார்த்திக ஞானம் உடையவனாயினும், தான் செய்வது ஹோமம் என்ற எண்ணம் இருப்பினும், விசேஷார்க்கியத்தை ஸ்விகரித்தல் அதாவது குடித்தல் என்னும் வியாவஹாரிக ஞானத்துடன் இருப்பதால், தவறாமல் குருவை நோக்கி, "நான் ஹோமம் செய்கிறேன்" என்று கூறி அவர் அனுமதி பெற்றபின் தான் ஸ்விகரிக்கவேண்டும்.

ஈண்டுப் பிரஸங்கானுஸாரமாக ஓர் விசேஷ தர்மம் எடுத்துச்சொல்லவேண்டியிருக்கிறது. பெரியோர்களால் விரதங்கள் எடுத்துத்தரப்பட்டவர்கள் பிறகும் அவ்விரதங்களை அப்பெரியோர்கள் இல்லாதபொழுதும் அவர்கள்கூறிய வழியில் செய்யலாம், அல்லது பிறரை உதவியாகக் கொண்டும் செய்யலாம். நம்முடைய பராபூசை அத்தகையது அன்று. மேற்கூறிய விரதங்களிலோ ஞானத்தின் அவசியம் இல்லை; ஓர் சாதனை முடிந்தபின் மற்றொன்றை மேற்கொள்வது என்பதும் இல்லை. இப் பராபூசையோ சாதகனுடைய பக்குவ நிலைக்கு ஏற்ப மாறும். ஆகையால் பூசை செய்ய விரும்புபவன் அல்லது ஜபம், பாராயணம் முதலியவற்றைச்செய்ய விரும்புபவன் தன் குருவினிடத்துக் கூறி உத்தரவு பெற்றுக்கொண்ட பிறகு தான் செய்யவேண்டும். தான் பெற்ற தீக்ஷையே பெற்ற பிறர் செய்வதைப் பார்த்து நாமும் அவ்வாறெல்லாம் செய்வோமென்று பலவற்றையும் தொடங்கக்கூடாது. அதனாலல்லவா குரு இருக்கும் ஊரிலேயேவசிக்கும் சிஷ்யன் அவரை நாளொன்றுக்கு மும்முறை சென்று தரிசித்து வர வேண்டுமென்றும், பக்கத்து ஊரில் இருப்பவன் நாளொன்றுக்கு ஒருமுறையாவது சென்று வணங்கி

வரவேண்டுமென்றும், தொலைவில் இருப்பவர் மாதத்திற்கு ஒருமுறையாவது சென்று அடி பணிந்து வரவேண்டுமென்றும், இவ்வாறெல்லாம், கட்டளை விதித்துள்ளது. ஆகையால் ஞானப்பியாசத்திற்கு அநுகுணமான இப்பூசை செய்பவர் தன் குருவை அருகில் வைத்துக்கொண்டுதான் பூசை செய்யவேண்டும். அவர் அறியாமல் பூசைசெய்வது தவறு. அவர் அனுமதி கொடுத்தால் செய்யலாம். அவர் அருகில் இல்லாமற் செய்வதால் உள்ள நன்மையை விடத் தீமைகளே மிக அதிகம். இவ்வாறு கூறுவதற்குக் காரணம் மேலே திக்தர்சனமாகக் காட்டப்பட்டது. விரிவாக நேரில் அறிந்து கொள்ள வேண்டியதே தவிர எழுதுவதற்கில்லை.

ஒரு குருவினிடம் தீக்ஷை பெற்றவன் அக்குருவால் ஏற்படுத்தப்பட்டுத் தன் ஸஹ சிஷ்யர்களால் கையாளப்படும் வழக்கங்களை மேற்கொள்ள வேண்டும். பிற மண்டலத்தினர் வழக்கங்களைத் தம் பூஜையில் புகுத்துக்கொள்ளக்கூடாது. சாஸ்திரத்தைவிடச் சம்பிரதாயமே வலிவுடையது. இது நன்கு அறியப்பட வேண்டும்.

நிற்க, ஹோமபுத்தியால் விசேஷ திரவ்யத்தை ஸ்வீகரித்தபின் ஸாதகனுக்கு எல்லாம் ஆனந்த மயமாய்க் காணப்பட அதில் அவன் திளைக்கிறான். இந்நிலை இவ்வாறு இருக்கும் என்று ஒருவர் மற்றொருவருக்கு எடுத்துச்சொல்லக்கூடியதல்ல. இவ்வுயர்நிலை அடைந்தவன் மறுபடியும் தேவியினால் பிரேரேபிக்கப்பட்டு உலக நிலைக்கு வரலாம். அப்பொழுது அவனுக்கு அவ்வனுபவம் ஸ்வபாவமாக மனத்தில் இருக்கவும் "நான் எவ்வளவு பாக்கியவான்.

நான் க்ருதார்த்தனுனேன். எனக்கு இந்நிலை என் குருநாதரின் கருணையாலல்லவா வந்தது,'' என்று அவன் நினைத்து அதனுல் அவனுக்கு அவரிடத்தில் க்ருதக்ஞதாபுத்தி ஏற்படும். அதனுல் தன்னை அவருக்கே அடிமையாக ஸமர்ப்பணம் செய்து விடுவான். அதுதான் ஆத்ம-பாத்ர ஸமர்ப்பணமாகும். இது ப்ராபஞ்சிக வியவஹாரம் ஆதலால் வெறும் பாத்திரத்தை ஸமர்ப்பணம் செய்யலாகாது. அதனை நன்ருகக் குலபாத்திரத்தில் கழுவி, சாமான்னியார்க்கியத்தால் சுத்தி செய்து, துடைத்து, அலங்கரித்து, சுவர்ண புஷ்பங்களால் நிரப்பிக் கொண்டு, நின்று, சிரசில் வைத்துக்கொண்டு "நீர் என் ஆத்மாவுக்கு நாயகர் ஆகையால் இவ்வென்னை ஸமர்ப்பணம் செய்கிறேன், ஏற்று, உய்விக்கவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டு ஸமர்ப்பணம் செய்யவேண்டும். ஈண்டு உய்விக்க வேண்டுவது "இவ்வுயர்நிலையிலேயே என் மனம் என்றும் நிலைத்திருக்க அருள்வாய்'' என்று கேட்டுக்கொள்வதாகும்.

ஸ்மர்ப்பணம் செய்த பாத்திரம் அவரால் திருப்பிக் கொடுக்கப்பட்ட பின்னர்தான் வேறு விஷயங்களில் சாதகன் பிரவர்த்திக்கலாம்.

இனி, ஸபர்யைக்குக் குருவானவர் வந்திராவிட்டால் சிஷ்யன் தனது சிரசில் உள்ளதாகப் பாவிக்கப்படும் ஸஹஸ்ராரத்தின் மத்தியில் உள்ள திரிகோணத்தில் வெண்மையானகலையுடுத்திக்கொண்டு தனது இடது தொடைமீது விற்றிருக்கும் தனது சக்தியைத் தனது இடது கையால் ஆலிங்கனம் செய்துகொண்டிருப்பதாகப் பாவித்து, அவரது திருவடிகளைத் தர்ப்பணம் செய்வதாகப் பாவித்து

ஸ்வகுரு பாதுகா மந்திரத்தால் தன் சிரசில் ஸ்வகுருவுக்கு மூன்றுமுறை தர்ப்பணமும், அவர் சிரசில் பரம குருவும், அப்பரம குருவின் சிரசில் பரமேஷ்டி குருவும் இருப்பதாகப் பாவிக்கவேண்டு மாதலால், சிஷ்யன் பரமகுரு பரமேஷ்டி ஆகியவர் களுக்கு உரிய தர்ப்பணங்களைத் தன் சிரசிலேயே செய்துகொள்ளவேண்டும்.

சில மண்டலிகளில் ஸ்வகுரு அங்குப் பிரஸன் னராயிருந்தாலும் சிஷ்யர்கள் தங்கள் சிரசிலேயே குருதர்ப்பணம் செய்வதை ஈண்டு அறியவேண்டும். பிறகு விசேஷார்க்கியத்தை ஸ்விகரிப்பதற்குப் பூஜை செய்பவர் அங்குக் கூடியிருப்பவர்களில் மிக்க ஜ்யேஷ்டரையும், மற்றவர் பூஜைசெய்பவரையும் உத் தரவு கேட்டுப் பின்னரே ஹோமம் செய்யவேண்டும். பூஜை செய்பவர் கனிஷ்டராயினும் சாதகர் அவ ரிடம் உத்தரவு பெறுவதே சம்பிரதாயமாகும். சாம யிகரில் தமக்கு ஜ்யேஷ்டரில்லாவிடில் பூஜை செய் பவர் தம் குருவிடம் உத்தரவு பெறுவதுபோல் பாவனைசெய்துகொண்டு ஸ்வீகரித்தல் வேண்டும்.

குருவும் பரமகுருவும் அங்கு இருப்பவராயின், குருவுக்குத் தர்ப்பணம் குருவின் திருவடிகளிலும், பரமகுருவுக்கு அவர் திருவடிகளிலும், பரமேஷ்டி குருவுக்கு அபபரம குருவின் சிரசிலும் தர்ப்பணம் செய்தல்வேண்டும். விசேஷார்க்கிய. ஸ்வீகாரத்திற் குப் பரமகுருவிடம் உத்தரவு பெறவேண்டும். வணங் கும்பொழுது முதலில் பரமகுருவையும் பிறகு ஸ்வ குருவையும் வணங்கவேண்டும். பாத்திர ஸமர்ப் பணமும் பரமகுருவினிடத்தில்தான்.

பூஜை செய்பவர் எல்லார்க்கும் கடைசியில்தான் குருதர்ப்பணம் செய்யவேண்டும். அவர் ஸ்ரீபாத்

திரத்திலிருந்து குருதர்ப்பணமும், ஆத்ம பாத்திரத்திலிருந்து ஆத்ம சதுஷ்டயமும் செய்யவேண்டும்.

விசேஷார்க்கியப் பிரதிஷ்டையின் முடிவில், குரு வந்திராவிட்டால், குரு பாத்திரத்தில் உள்ள அர்க்கியத்தை ஆத்ம பாத்திரத்தில் ஏற்றுக்கொண்டு, குருபாத்திரத்தைக் குலபாத்திரத்தில் கழுவி, சாமான்னியர்க்கியத்தால் சுத்திசெய்து, துடைத்து, கந்த புஷ்பங்களால் அலங்கரித்து, சுவர்ண புஷ்பங்களால் நிரப்பித் தன் சிரசில் வைத்துக்கொண்டு, மானஸிகமாகக் குருவின் ஸ்தூல தேகத்தையும், பின் பொது ஸ்வரூபமாகிய ப்ரகாச விமர்சங்களையும் தியானித்துக்கொண்டு அப்பாத்திரத்தைக் குருபாத்திர மண்டலத்தில் வைத்து விடவேண்டும். பின் ஆத்ம பாத்திரத்திலுள்ள அர்க்கியத்தைத் தன் குருஸ்வீகரிப்பதாகப் பாவித்துத்தான் ஹோமம்செய்துகொண்டு, பின் அப்பாத்திரத்தைக் கழுவாமலும், மண்டலத்தில் வைக்காமலும் விசேஷார்க்கியத்தால் நிரப்பி ஆத்மசோதனம் செய்யவேண்டும். தர்ப்பண சோதனங்களுக்கு உரிய விசேஷார்க்கியம் த்விதீய சகலத்தோடு கூடியதாக இருக்கவேண்டும்; ஈசுவரன் இல்லாது பிரபஞ்சம் இல்லை அல்லவா!

**அளிபாத்திரம்**

அளிபாத்திரம் தன் குருவினிடத்திலேயே தீக்ஷைபெற்ற தன் மனைவிக்குத்தான் தரலாம். தம்மை வீரர்களாக நினைத்துக்கொண்டு பிறர்க்குத் தரலாகாது. தன்மனைவிக்குத் தருவதைக் காட்டிலும் நித்திய சுவாஸினீஸ்வரூபிணியாகிய அம்பாளுக்குத் தருவது மிகச் சிறப்பாகும். ஏனெனில், அதற்குரிய மந்த்ரங்களின் அர்த்தம் அறிந்தவர்களே அப்பாத்

திரத்தைப் பெறற்குத் தகுந்தவராவர். அப் பொருள்களை அறிந்தவர்களாயினும் தன் மனைவி யல்லாத பிற சுவாசினிகளானால் அவர்கட்கு அப் பாத்திரம் தருவது இக்காலத்திற்குத் தகுந்தது அன்று; தரக்கூடாது என்பது விதி அல்ல.

அளி பாத்திரம் முதல் மூன்று மகாரங்களை யுடையது. அவை அக்நி ஜல, பிருதிவி தத்துவங் களைக் குறிப்பனவாகும். பஞ்சிகரணமே அல்லாது த்ரிவிர்த்கரணமாகவும் ஸ்தூலப்பிரபஞ்ச சிருஷ்டி குறிக்கப்படுவதுண்டு. எவ்வாறாயினும், இப்பாத்திர மானது தோன்றும் பிரபஞ்சத்தைக் குறிப்பதாகும்.

ஞானம் வந்த பின்னும் பாதிதாநுவிருத்தி யினால் பிரபஞ்சம் தோன்றிக்கொண்டுதான் இருக் கும். அது ஸோபாதிகப் பிராந்தியின் காரியமாகும். ஆகையால் அது தோன்றிக்கொண்டிருக்கும். கயிற் றில் பாம்பு போன்று நிருபாதிகப் பிராந்தியின் காரியமாயின் ஞானம்வந்த சமகாலத்தில் பிராந்தி நீங்கும்.

இப்பிரபஞ்சத் தோற்றம் ஆரூட ஞானிக்குப் பாதகமாகாது. அதனை அவன் இந்திரஜால வித் தையால் உண்டான பொருள்களைப்போல் நினைப் பான். ஆனால் சாதகனோ அதன் தோற்றத்தால் மிக்க அல்லல் அடைவான். பரோக்ஷமாக அறிந்த ஜீவப்பிரஹ்மைக்ய ஞானத்திற்கே கேடு வந்துவிடும். மனம் பிராபஞ்சிக விஷயங்களில் ஆழ்ந்துவிடும்.

பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமான சித்சக்தி தான் ஸு-பகையாவள். அவள் சிதானந்த இச்சா ஞான கிரியா ஸ்வரூபிணியாவள். சிதானந்த பாகத் தால் பிரபஞ்சத்திற்கு விவர்த்த காரணமாகவும்,

இச்சா ஞானகிரியையால் பரிணும காரணமாகவும் அவள் இருக்கிருள்.

இச்சா ஞான கிரியைகளே பிரபஞ்சத்தில் நாம ரூபங்களாகத் தோன்றுகின்றன. இந் நாமரூப நாட்டமே ஞானத்திற்கு விரோதியாகும். இப்பிர பஞ்சத்தை ஈச்வரிக்கு அர்ப்பணம் செய்யவே, அதாவது ஈசுவரிக்கும் பிரபஞ்சத்திற்கும் அபேத நிச்சயம் செய்யவே நாமரூபங்கள் அஸாரமாகி அஸ்தி பாதி பிரியங்கள் மாத்திரம் ஸாரமானதாக மிஞ்சும்.

கற்பித ஸர்ப்பம் அதற்கு அதிஷ்டானமான கயிற்றின் விசேஷ யதார்த்த ஞானத்தினுல் அதில் மறையும்; அதாவது கயிருகத் தோன்றும். அது போலவே கற்பித நாம ரூபங்கள் அதிஷ்டான சித்தில் மறையும். நாம ரூபங்களை ஆதாரமாகக் கொண்டுள்ள துவைத விருத்திகள் அடங்கி அகண்டாகார விருத்தி ஏற்படும். இதனுல் விரோதியாகிய அஞ்ஞானம் ஸம்ஹாரம் செய்யப்படும். இது ஈச்வரியின் பிரசாதமாகும். இதுதான் சாதகன் விரும்பியது.

இவ்வளவு ஆராய்ச்சி இல்லாது அளி பாத்திரம் கொடுப்பதைவிடக் கொடுக்காமையே நல்லது. அளிபாத்திரம் கொடுக்காவிட்டால் பூஜைக்குக் குறைவு ஏற்படாது.

**சுவாஸினீ பூஜை**

மாயா விசிஷ்ட காரணேச்வரனைவிட வேறல்லாத சிதானந்த இச்சா ஞானகிரியா ஸ்வரூபிணியாகிய சித் சக்தி பிரபஞ்சமாக விளங்குகிருள். இவள், தான் நிலைத்தற்கு வேறு ஆதாரம் வேண்டாது தன் மகிமையாகிய அகண்ட ஞானத்திலேயே நன்கு பிரதிஷ்டிதமாயுள்ளாள். இவளே சுவாஸினியாவாள்.

இச்சொல்லால் உலகத்துப் பெண்டிரை வழங்குவது கௌணமேயாகும்.

சித்சக்தியாகிய இச்சுவாஸினியுடன் இரண்டறக் கலத்தலே சுவாஸினி பூஜையாம். அதாவது, தன்னுடைய அந்தக்கரண உபஹித சைதன்னியமே சித்சக்தி என ஐயமின்றி அறிதலாம்.

இனி, உலகத்துப் பெண்டிராகிய சுவாஸினிகளைப் பூஜிப்பதற்குரிய சம்பிரதாயக் கட்டுப்பாடுகளை ஆராயவேண்டியுளது. சுவாஸினிகள் தீக்ஷை பெற்றவர்களாகத்தான் இருக்கவேண்டும். அவர்களுள்ளும் தன் குருவினிடத்தில் தீக்ஷைபெற்ற தன் மனைவியே தன் பூஜைக்குச் சிறந்தவள்.

சுவாஸினியை அழைத்து ஓர் அழகிய ஆசனத்தில் அமரச்செய்து கந்தபுஷ்பங்கள் அணிவித்துப் பாத்திரம் தரல்வேண்டும். அச்சுவாஸினி அம்ருதத்தை விதிப்படி குருதர்ப்பணம் செய்து ஹோமபுத்தியுடன் ஸ்வீகரிக்கவேண்டும். பின் வஸ்த்திர ஆபரணங்களுடன் தாம்பூலம் கொடுத்துச் சிறந்த உணவு உண்பித்துச் சந்தோஷிப்பிக்க வேண்டும். இப்பூஜையால் உலகத்து ஸ்திரீகளெல்லாம் தேவியின் ஸ்வரூபமாகப் பார்க்கும் ஸாதனம் சாதகனுக்கு ஏற்படும்.

தீக்ஷை பெற்றவர்கள் ஒருவரும் கிடைக்காவிட்டால் ஓர் சுமங்கிலியை அழைத்துக் கந்தம் புஷ்பம் வஸ்திரம் ஆபரணம் தாம்பூலங்களைக் கொடுத்து மாயா பீஜத்தால் ஸத்யோ தீக்ஷைசெய்து விசேஷார்க்கியம் தரல் வேண்டும். பிறகு போஜனம் செய்வித்துச் சந்தோஷிப்பிக்கவேண்டும்

தீக்ஷைபெற்ற சுவாஸினி தனக்கும் சித்சக்திக்கும் எள்ளளவும் பேதமில்லை என்ற த்ருடஞான முள்ளவரானல் சக்கரத்தில் சுவாஸினி ஸ்ரூபிணியாகிய அம்பாளுக்குத் தர்ப்பணம் உபசாரங்கள் செய்வதே அன்றி, அச்சுவாஸினியிடத்திலும் தர்ப்பணோபசாரங்கள் செய்யலாம். பேத புத்தி மிக்குள்ள இக்காலத்தில் இவ்வாறு செய்யாமையே நல்லதாகும். இதனுல்தான் தீக்ஷை பெருதவரையும் சம்பிரதாயம் அறியாதவரையும் பூஜை நடக்கும் இடத்தில் சேர்க்கக்கூடாது என்பர் பெரியோர்.

**சாமான்னியார்க்கிய உத்வாஸனம்**

சாமான்னியார்க்கியம் குருசாஸ்த்திர வாக்கியங்களால் பெறப்பட்ட ஜீவப்பிரம்மைக்கிய பிரதிபாதக ஞானமாகும். பரோக்ஷமாக அறியப்பட்ட இந்த ஞானத்திற்குக் குருவினுல் பெறப்படும் மஹாவாக்கிய உபதேசமே உயிர்நாடியாகும். இது ஸாமான்னியார்க்கியப் பிரதிஷ்டையில் க்ஷீரபிந்துவைச் சேர்த்தலால் குறிக்கப்பட்டதாகும். தத்துவமஸி என்னும் உபதேச ரூப மஹாவாக்கியாநுசந்தானத்திஞல் தான் முடிவில் அஹம்பிரம்மாஸ்மி ரூப அனுபவம் ஏற்படும். இவ்வநுஸந்தானமோ மனன நிதித்தியாஸனத்தின் பாற்படும். விசேஷார்க்கியப் பிரதிஷ்டையாலும், சதுர்நவதி மந்திரங்களால் ஸம்ஸ்காரம் செய்வதாலும், குரு ஆத்ம யஜனங்களாலும் மனன நிதித்யாஸனங்கள் குறிக்கப்படுவது முன்னரே விளக்கப்பட்டது. இவற்றிற்கு அடிப்படை மஹாவாக்கிய உபதேசமல்லவா? அது ச்ரோத்ரேந்திரிய வாயிலாக உள்ளே சென்றவுடன அஹம்பிரஹ்மாஸ்மி என்னும் அனுபவம் உத்தமாதிகாரிக்குத் தான் வரும். பிறர்க்கு அவ்வாறு அனுபவம்

வராததேயல்லாமல், நான் எவ்வாறு பிரஹ்ம மாவேன், நான் ஜீவன்தானே என்னும் சந்தேக விபரீதங்கள் உடையவராவர். இவை நீங்குதற்குக் குரு சாஸ்த்திர வாக்கியங்களில் அசையாத நம்பிக்கைவேண்டும். இந்த நம்பிக்கை அபரோக்ஷ ஞானம் பெறும் வரையில் ஸ்திரமாக இருக்கவேண்டும். ஆகையால்தான் பூஜோத்வாஸனம் வரையில் சாமான்னியார்க்கிய பாத்திரத்தைச் சாலனம் (அசைத்தல்) செய்யக்கூடாது என்ற கட்டுப்பாடு உள்ளது.

மனனம் செய்யும்பொழுதெல்லாம் உபதேச வாக்கியம் அவ்வப்பொழுது கவனத்திற்குக் கொண்டுவரவேண்டும். இதற்கு அத்வைத சாஸ்த்திரச் சிரவணம் ஸஹகாரியாகும். மனதில் எழுகின்ற சந்தேகங்களை நீக்க அவ்வாக்கியத்தை அநுஸந்தானம் செய்யவேண்டும். அவ்வாக்கிய ஸ்மரணம் இல்லாமல் மனன நிதித்யாஸனமே இல்லையாதலால் இப் பாரபூஜையின் ஒவ்வொரு உபசாரத்திற்கும் சாமான்னியார்க்கியம் சேர்த்தல் வேண்டும் என்ற விதியுள்ளது. ஆகையால் குருபதேச மஹாவாக்கியாநுஸந்தானபூர்வகமாய்த்தான் ஜகத் ஜீவபரங்கள் விமர்சிக்கப்படும்.

அஸம்ஸ்க்ருதமான பிந்துவைச் சேர்க்கலாமா என்ற ஐயம் எழலாம். விசேஷார்க்கியத்தை ஸம்ஸ்காரம் செய்வதாவது ஜகத் ஜீவ பரங்களை ஆராய்வதாகும். இவ்வாராய்ச்சிக்கு அடிப்படையானது குருபதிஷ்ட மஹாவாக்கியமாகும். உபதேசமான பின் தான் அவ்வாக்கியத்தை மனனம் செய்தலும் ஜகஜ் ஜீவபரங்களின் ஆராய்ச்சியும் நிகழும். ஆகையால் மஹாவாக்கிய உபதேசம் அஸம்ஸ்கிருத பிந்துவைச்

சேர்த்தலால் குறிக்கப்படுகிறது. ஆகையால் அது சரியேயாகலாம்.

ஜகத்து ஜீவன் பரம், என்று தனித்தனியாகக் கோசரமான மூன்றும் நிதித்யாஸனத்தின் பயனாக ஒரே பிரஹ்மமாய் விளங்கி, அப்பிரஹ்மமும் அஹம் பத லக்ஷியார்த்த சித்சக்தியாக விளங்கி, அதுவும் கேவல ஸ்புரணமாத்திரமாய் நின்றுவிடும். இந் நிலையை அடைந்தவனுக்கு இனிச் சாதனை வேண் டியதில்லை; பெற்ற ஞானத்திற்கு ரக்ஷணை என்று ஒன்றும் வேண்டியதில்லை. ஆகையால் இதன்பின் குருபதிஷ்ட மஹாவாக்கியாநுஸந்தானமும் அத் வைத சாஸ்த்திர விசாரமும் வேண்டியதில்லை. ஆகை யால் சாமான்னியார்க்கியம் உத்வாஸனம் செய்யப் படுகிறது. இது ஜீவன்முக்தி நிலையாம்.

இந்நிலை அடைந்தவரே பிறரை உய்விக்கத் தகுந்த பெருமையுடையவர். இவர்களைத் தாம் "ச்ரோர்த்ரியம் பிரஹ்மநிஷ்டம்" என்ற தொடர் குறிக்கின்றது. இவர்களிடத்தில் ஸ்வாபாவிகமாகக் காணப்படும் கருணையே அருட்சக்தியாகும். இவர் ஈச்வரதுல்யர்; இவர் பிரபஞ்சத்தில் வியவஹாரமும் செய்வர். இவரது ஸமாதி நிலை ஸ்விகல்பமாகும். இது நிர்விகல்ப ஸமாதியிலிருந்து இறங்கிவந்த நிலையாம். அச்சமாதியால் அவர்க்கு ஜீவன்முக்தி ஆனந்தம் தவிர வேறு ஒரு பிரயோசனமும் இல்லை. அவரது சமாதியின் ச்யுதத்திற்குக் காரணம் நம் போன்ற ஜீவர்களின் புண்ய கர்மாக்களின் பலமே யாம். நாம் உய்வதன் பொருட்டு ஈச்வரியின் பிரே ரணையால் காட ஸமாதியிலிருந்து அப்பெரியோர் இறங்கி உலக வியவஹாரங்களைச் செய்வதாகக் காணப்படுகின்றனர். இத்தகையோரிடம் பெறப்

பட்ட உபதேசமே சாமான்னியார்க்கியத்தால் குறிக்கப்படுவதாம். ஆகையால் உத்வாஸனத்தின் பின் அவ்வர்க்கியம் சாதகர்களாகிய சாமயிகர்மேல் தெளிக்கப்படுகிறது.

**தேவதோத்வாஸனம்**

முதலில் மூர்த்தி கல்பனம் செய்து பின் தியானம் செய்து பிறகு ஆவாஹனம் செய்யப்பட்டதல்லவா? நிர்விசேஷ பிரஹ்மமான காமேச்வரரின் இடது தொடையில் அந்தக்கரண உபலக்ஷித சைதன்னியமாகிய லலிதா மஹாத்ரிபுரசுந்தரி ஆவாஹனம் செய்யப்பட்டது. இந்த லலிதையின் கிரணங்களே ஆவரண தேவதைகள். எல்லாம் சின்மயமாய் நிற்க இவ்வாவரண தேவதைகள் ஸகுண ஸாகார வடிவத்தையுடைய ஈச்வரியில் ஒடுங்கவும், அவ்வீச்வரியும் ஆத்மாபின்னமாதலால் அதனுடைய ஸகுண நிராகார ஸ்வரூபம் அந்தக்கரண விசிஷ்ட சைதன்னியத்தில் ஒடுங்கவும், அதுவும் நிர்க்குண பிரஹ்மாபின்ன சாக்ஷி சைதன்னியத்தில் ஒடுங்கவும், அதுவும் இதமாகார விருத்தி வடிவ பாஞ்ச பௌதிகமய பிரபஞ்சம் இல்லாமையால் கேவல ஸ்புரண மாத்திரமாய் நிற்கும். இதுவே உத்வாஸனமாம். மேலே குறிக்கப்பட்ட ஒடுங்குதல் யாவும் அபேத நிச்சயம் செய்தல் என்று கொள்ளல் வேண்டும்.

**விசேஷார்க்கியோத்வாஸனம்**

அகண்டாகார விருத்தியினுல் அஞ்ஞானம் அழிகிறது. அதன்பின் அவ்விருத்திக்குக் காரியம் இல்லை. அவ்விருத்தியோ சுத்த சத்துவப் பிரதான அந்தக் கரணத்தின் பரிணமமாகையால் அது

ஞானம் அல்லது சித்தோடு கூடித்தான் இருக்கும். அந்த விருத்தியோடு கூடிய ஞானம்தான் ஜீவப் பிரஹ்மைக்கிய அநுபவரூப விசேஷஞானமாகும். அதனைத்தான் விசேஷப்பிரஹ்மம்என்று அத்வைத சாஸ்த்திரங்கள் அறைகின்றன. அஞ்ஞானத்தின் ஆத்யந்திக நாசம் ஏற்பட்டபின் அவ்வகண்டாகார விருத்திஞானத்திற்குக் காரியம் ஒன்றும் இல்லை யாதலால் அதுவும் பிரஹ்மத்தில் லயம் ஆகிவிடு கிறது. ஈண்டு லயம் என்றது அந்தக் கரணத்தின் அரூப நாசமேயாகும். இதன் பின் ஜீவன் முக்த னுக்கு உலக வியவஹாரம் ஆபாஸமாகவும் இல் லாது விதேஹ முக்தி ஏற்படுகிறது. இந்த விதேஹ முக்தி தேஹ வீழ்ச்சிக்கு முன்னும் ஏற்பட லாம். இத்தகைய அந்தக் கரணத்தின் அரூப நாசமே விசேஷார்க்கிய உத்வாசனமாகும். இத னேடு ஞான யக்ஞம் முடிந்ததெனப் பெறப்படுகிற தல்லா?

இந்த யக்ஞத்தைவிடச் சிறந்த யக்ஞம் வேறு இல்லை. இது ஒன்றுதான் யக்ஞம் என்று சொல்லத் தகுந்தது எனலும் மிகை அல்ல. இதனுல் சர்வேச் வரன் திருப்தி அடைகிருன். இத்தகைய யக்ஞம் நடக்க வேண்டியே அல்லவா முதற்கண் வேதங் களையும், பின் உபநிடதங்களையும், கடைசியாக ஆக மங்களையும் அவன் வெளியிட்டது. ஒரு ஜீவனுவது அம்மார்க்கத்தில் பிரவர்த்தித்து அது குறிக்கும் ஜீவன் முக்தி நிலையை அடைந்தமைக்கு அவர் மகிழ் வார் என்பது சொல்லவும் வேண்டுமோ?

இந்நிலையை அடைந்தவனுகிய ஜீவன் முக்தன் இருக்கும் இடம் சாந்தி நிலவி இருக்கும். அவன்

சன்னிதியில் சாதகர் செய்யும் ஜபதபங்கள் பன்மடங்கு பயனைத் தருவனவாகும். அணிமாதி ஸித்திகள் அவனை ஆச்ரயித்து உலக க்ஷேமத்தின் பொருட்டுத் தத்தம் காரியம் செய்யும். அவனை அண்டி அவனுக்குச் சிச்ரூஷை செய்பவரின் பாபங்கள் நீங்கும்; சாபங்களும் ஒழியும். அவன் சன்னிதியில் தெய்வமணம் கமழும். அவனை அடைந்தவர் உபதேசமில்லாமலேயே ஆத்யாத்மிக வழியில் ஈடுபடுவர். ஆகையால் இந்த ஞான யக்ஞத்தால் ஜகத்தெல்லாம் திருப்தி அடையும் என்பது நன்கு அறிய வேண்டும்.

(சிவம்)

அஹங்கிரஹோபாஸனா விமர்சனம்
முற்றிற்று.

# ஸ்ரீ குஹாநந்த மண்டலி,

## பழவந்தாங்கல், மதருஸ்-16.

### புஸ்தகங்களின் ஜாபிதா

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | குருதத்துவ விமர்சம் | ... | 0 | 8 | 0 |
| 2. | ஸ்ரீநகர விமர்சம் | ... | 2 | 0 | 0 |
| 3. | வரிவஸ்யா ரகசியம் | ... | 2 | 0 | 0 |
| 4. | ஸ்ரீவித்யாஸபர்யாபத்ததி (நாகரம்) | ... | 3 | 8 | 0 |
| 5. | ஸ்ரீவித்யாஸபர்யாவாஸனே (தமிழ்) | ... | 3 | 0 | 0 |
| 6. | ஷை (ஆங்கிலம்) | ... | 3 | 0 | 0 |
| 7. | லலிதோபாக்கியான விமர்சம் (தமிழ்) | ... | 0 | 6 | 0 |
| 8. | ஸுப்ரஹ்மண்ய தத்துவம் (தமிழ்) | ... | 2 | 0 | 0 |
| 9. | ஸ்ரீவித்யாநித்யான்ஹிகம் (நாகரம்) (அச்சில்) | ... | 5 | 0 | 0 |
| 10. | மநீஷாபஞ்சகம் (தமிழ்) | ... | 0 | 10 | 0 |
| 11. | காமகலா விலாசம் (தமிழ்) | ... | 2 | 0 | 0 |
| 12. | வித்யாகீதை (தமிழ்) | ... | 1 | 4 | 0 |
| 13. | லலிதாத்ரிசதீ பாஷ்யம் (தமிழ்) | ... | 3 | 0 | 0 |
| 14. | சக்தி மஹிம்னஸ்தோத்திரம் (தமிழ்) | ... | 0 | 12 | 0 |
| 15. | ஞானப்பிரகாசம் (தமிழ் நாடகம்) | ... | 0 | 10 | 0 |
| 16. | அஜபாகல்பம் (தமிழ்) | ... | 0 | 12 | 0 |
| 17. | கமலாலய க்ஷேத்ரதத்துவம் (தமிழ்) | ... | 2 | 0 | 0 |
| 18. | ஸ்ரீராமவிக்ரமம் நாடகம் (தமிழ்) | ... | 0 | 8 | 0 |

*கிடைக்குமிடம்:—*

1. **குஹாநந்தமண்டலி,**
பழவந்தாங்கல்,
பரங்கிமலை P. O., மதராஸ்-16.

2. **145, காமாக்ஷியம்மன் சன்னிதி தெரு,**
பெரிய காஞ்சீபுரம்.

Muthamil Press, Kancheepuram. 266-12-1000.